# புறநானூறும் தமிழரும்






சொற்பொழிவாளர் :

எஸ். வையாபுரிப் பிள்ளை
மு. அருணுசலம்
கி. வா. ஜகந்நாதன்
அ. ச. ஞானசம்பந்தம்
மு. சண்முகம் பிள்ளை






சக்தி காரியாலயம்

சென்னை :: மதுரை

55-5

# பதிப்புரை

புகழ்எனின் உயிரும் கொடுக்குவர், பழியெனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர் ;

தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே;

யாதும் ஊரே யாவரும் கேளிர்,
தீதும் நன்றும் பிறர்தர வாரா ;

இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்
அறவிலை வாணிகன் ஆய்அலன் ;

என்றவை முதலான தமிழர் கொள்கைகளைத் திறம்பட விளக்கும் புறநானூறு ஆகிய பழந்தமிழ் இலக்கியத்தைப் போற்றும் நோக்கத்தோடு, இளம் மாணவர்களைக் கொண்ட தியாகராய நகர் வள்ளுவர் குறட்டினர் 31-10-'43, 1-11-'43 ஆகிய இரண்டு நாட்களிலும் சிந்தாதிரிப் பேட்டை உயர்தரக் கலாசாலையில் சென்னைச் சருவகலா சாலைத் தமிழாராய்ச்சித்துறைத் தலைவர் இராவ்சாகிப் ச. வையாபுரிப் பிள்ளையவர்கள் தலைமையில் புறநானூற்று விழா ஒன்று நடத்தினர்கள். அவ்விழாவில் பேசிய நால்வர் பேச்சுக்களும் தலைவர் பேச்சும் இந்நூல் வடிவாக வெளி வருகின்றன. இந்நூல் தமிழருக்கு இலக்கிய விருந்தாக அமைவதாக.

சக்தி காரியாலயத்தார்.

# பொருளடக்கம்

# தலைமையுரை

இராவ் சாகிப் ச. வையாபுரிப் பிள்ளை

புறநானூற்றிலுள்ள செய்யுட்கள் இயற்றப்பெற்றுச் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகள் கழிந்துவிட்டன. இந் நீண்ட காலத்தை எளிதாகச் சொல்லிவிட்டோம். ஆனால் இதன் பொருண்மையை அத்தனை எளிதாக உணர்ந்து கொள்ளமுடியாது. பலவேறு துறையிலும் தமிழ்நாட்டில் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகள் மூலமாகத்தான் இதனை ஒரு வாறு அறியமுடியும்.

காலமென்பது கறங்குபோற் சுழன்று
மேலது கீழாய்க் கீழது மேலாய்
மாற்றிடுந் தோற்றம்

என்றனர் ஆசிரியர் சுந்தரம் பிள்ளை. அரசியல் துறையை நோக்குவோம். தமிழ்நாட்டு மூவேந்தர் வமிசங்களும் பல நூற்றாண்டுகள் அரசுபுரிந்து மாய்ந்தன. பல்லவ வமிசம், சளுக்கிய வமிசம், எத்தனையோ குறுநில மன்னரது வமிசங்கள், விஜயநகரத்து அரச வமிசம், நாயக்கர் வமிசம் பாளையக்காரர் வமிசங்கள் இவை அனைத்தும் ஒன்றன் பின் ஒன்றாக ஆட்சிபுரிந்து கழிந்தன.

இருங்கடல் உடுத்தஇப் பயங்கெழு மாநிலம்
உடையிலை நடுவண திடைபிறர்க் கின்றித்
தாமே யாண்ட ஏமங் காவலர்
இடுதிரை மணலினும் பலரே சுடுபிணக்
காடுபதி யாகப் போகித்தம்
நாடு பிறர்கொளச் சென்றுமாய்ந் தனரே.

(புறம் - 363)

என்றனர் ஒரு புலவர். சமயத் துறையைக் காண்போம். பௌத்தம் மிக்க சிறப்புடன் பல நூறு ஆண்டுகளாக

வழங்கிவந்து பின் எக்காரணத்தினலோ மறைந்து விட்டது. ஜைனமும் அப்படியே வெகுகாலம் வழங்கி இப்போது அங்கங்கே அருகிநின்றுள்ளது. பாசுபதம், காளாமுகம், காபாலிகம் முதலிய மதங்களும் இப்போது ஆராய்ந்து இயல்பு காணவேண்டிய பண்டைப் பொருள் களாய்விட்டன. இவையெல்லாம் போக, சைவ சமயத் திலும் சமயாசாரியர்கள் நால்வர், நாயன்மார்கள், நீல கண்ட சிவாசாரியார், மெய்கண்டதேவர் முதலிய பெரி யார்கள் அனைவரும் தங்கள் அருட்செயல்களை நிகழ்த்தி இறைவனது திருவடிநீழலை யடைந்தனர். இவ்வாறே ஆழ்வாராதியரும் நாதமுனி முதலிய ஆசாரியர்களும் இராமாநுஜரும் தங்கள் அருள் விளங்கும்படி பூவுலகில் நிலவிப் பரமபதம் அடைந்துவிட்டனர். இவர்கள் அனை வர்க்கும் முன்புள்ள ஓர் காலத்தில் சமயவுணர்ச்சி யாதா யிருக்கக்கூடும் என்று நம் மனம் கலக்கமடைகின்றது.

**குறும்பூழ் பறப்பித்த வேட்டுவன்போல் அன்னை**
**வெறுங்கூடு காவல் கொண்டாள் (முத்தொள்ளாயிரம்)**

என்று ஒரு பிற்காலப் புலவர் கூறுகிருர். இதுபோல, தமிழ் மக்கள் வாழ்க்கைச் சரித்திரத்தில் மேற்கூறிய அருட்பெருஞ் செல்வர்கள் வாழ்வையும் அவர்கள் இயற் றிய அரிய தொண்டுகளையும் சிறிது மறந்துவிட்டால், நாம் வெறுங்கூடு காவல் கொள்பவர்களாய்த்தான் இருப்போம் என்று கருதத் தோன்றுகிறது. இனி நமது இலக்கியச் சரிதத்தை எடுத்துக்கொள்வோம். வள்ளுவர், இளங்கோ வடிகள், கொங்குவேள், திருத்தக்க தேவர், சேக்கிழார், கம்பர்: இப் பெருங்கவிகள் அனைவரும் என்றும் அழி யாத இலக்கியச் செல்வங்களை நமக்கு அளித்து, தங்கள் வாழ்வின் பயனை முற்றுவித்துப் போயினர். இவர்களுடைய திருநாமங்களையும் இவர்கள் இயற்றியளித்துள்ள கவிதைப்

பெருங் கோயில்களையும் சற்று மறக்க முயலுவோம். யாது எஞ்சியுள்ளது என்று நினைப்பதற்குமுன் நம் உள்ளம் பதைக்கின்றது. வெறுங்கூடுதானும் உளதோ என நம்மை ஐயுறச் செய்கின்றது. ஒரு புலவர்

திருத்தக்க மாமுனி சிந்தாமணி கம்பர்
விருத்தக் கவித்திறமும் வேண்டேம்—உருத்தக்க
கொங்குவேள் மாக்கதையைக் கூறேம் குறளனுகேம்
எங்கெழிலென் ஞாயிறு எமக்கு

என்று கூறினர். இவரது மனப்பான்மையைத்தான் நாமும் அடைந்துவிடுவோம். இனிச் செய்யுட் சரிதத்தை நோக்குவோம். இதன்கண்ணும் எத்தனையோ வேறுபாடுகள் நிகழ்ந்துவிட்டன. யாப்பருங்கலவிருத்தியை நோக்கினுல் எத்தனைச் செய்யுள் வகைகள் மறைந்து போயின என்று ஒருவாறு அறியலாம். புதியனவாகச் சில செய்யுள் வகைகள் பெரும் புலவர்களாற் கையாளப்பட்டுப் பெருமையடைந்து பின் ஒளியிழந்து மங்கின.

மாலுங் குறளாய் வளர்ந்திரண்டு மாணடியால்
ஞாலம் முழுதும் நயந்தளந்தான்—வாலறிவின்
வள்ளுவருந் தங்குறள்வெண் பாவடியால் வையத்தார்
உள்ளுவவெல் லாம்அளந்தார் ஓர்ந்து

என்பது திருவள்ளுவமாலைச் செய்யுள். இங்ஙனம் புகழப்பட்ட குறள் வெண்பா வள்ளுவராலேயே சிறப்பெய்தி விளங்கிப் பின் வாழ்விழந்தது. விருத்தக்கவித் திறங்களெல்லாம் சுமார் கி. பி. 7-ம் நூற்றாண்டளவில் தோன்றியவையே. அகப்பொருளுக்குச் சிறப்புரிமையுடையதாகப் போற்றப்பட்டுள்ள கட்டளைக் கலித்துறையும் பிற்காலத்துப் புதிதாய்ப் புகுந்ததுவே. இங்குக் குறித்தன போன்ற செய்யுளினங்களால் இயன்ற பிள்ளைத் தமிழ் முதலிய பிரபந்தங்களும் பிற்பட்டு இடைக் காலத்தில் தோன்றியனவே.

பிள்ளை என்ற சொல்லை மக்களின் இளமைக்கு வழங்குதல் மரபன்று என விதித்துள்ளார் தொல்காப்பியர் :

**குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை**
**கிழவ அல்ல மக்கட் கண்ணே**

என்பது மரபியற் சூத்திரம். மக்களின் இளமைக்கு 'குழவி' 'மகவு' என்ற இரண்டே சொற்கள்; பிள்ளை முதலிய ஏனைய சொற்கள் அப்பருவத்துக்கு உரியனவல்ல. 'பிள்ளையாட்டு' என்பது தொல்காப்பியத்துள் வந்துள்ளது. அங்கே அச் சொல்லுக்கு வீரன் என்று பொருள். இங்ஙனமிருப்ப, மக் களின் குழந்தைக்குப் பிள்ளை எனப் பெயரிட்டு அப்பருவத் துச்செயல்களைப் பிரபந்தமாகச் செய்தல் பிற்கால வழக் கென்று சொல்லவும் வேண்டுமோ ? எனவே பெரும்பான் மையாய் வழங்கிய செய்யுளினங்களும், பிரபந்த வகைகளும் இடையிலே தோன்றி இக்காலத்து வாழ்வு முடியும் நிலையி லுள்ளன. பண்ணத்தி முதலிய பல செய்யுள் - நூல்கள் பன்னூறு ஆண்டுகட்கு முன்பே வழக்கொழிந்தன.

இனித் தமிழ் மொழியிலே ஏற்பட்டுள்ள வேறுபாடு களைக் கூர்ந்து நோக்குவோம். முதலாவது நாம் கவனிக்கத் தக்கது திராவிட மொழிகளிற் பலவும் புறநானூற்றுக்குப் பின் இவ் இரண்டாயிரம் ஆண்டுகளிற் பல்வேறு காலங் களில் தோன்றியன. மலையாளமொழி சுமார் கி. பி. 1100-ல் தமிழிலிருந்து கிளைத்தது. இதற்கு 5, 6 நூற்றாண்டுகட்கு முன்னே கன்னடமும் தெலுங்கும் கிளைத்தன. தமிழுக்கும் இவற்றிற்கும் இடையே உள்ளது தாய்மைத் தொடர்பா அல்லது தங்கைத் தொடர்பா என்ற வியவகாரம் இப் போது அவசியமில்லை. ஆசிரியர் சுந்தரம்பிள்ளை

**கன்னடமும் களிதெலுங்கும் கவின்மலையாளமுந் துளுவும்**
**உன்னுதரத் துதித்தெழுந்தே ஒன்றுபல வாயிடினும்**

என்று கூறியது பெரும்பாலும் உண்மையேயென நடு

நிலையாளர் யாவரும் ஒப்புக்கொள்வர். இதனுல் தாய்மை என்னும் பெருமை காரணமாகப் பிற திராவிட மொழி களின் இளமை குறித்து நமது தமிழணங்கு நகுகின்ருள் என்று கருதல் தவறு. மொழி வரலாறு அறிந்தவன் இங் ஙனம் ஒருபொழுதும் கருதான். இம்மொழிகளெல்லாம் தோன்றுவதற்கு முன்பு புறநானூற்றுச் செய்யுட்கள் தோன்றியனவென அச் செய்யுட்களின் தொன்மையும், அத்தொன்மையின் அளவும் தெளிவாகப் புலப்படுதற்கு மாத்திரமே இங்கு இச்செய்தி கூறப்பட்டதாகும். இரண் டாவது கவனிக்கத்தக்கது தமிழ் மொழியின் சொற் செல் வம். தொல்காப்பியனுர் தாமே

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொலென்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே

என்று கூறினுர். ஒருசில வடசொற்களும் ஒருசில திசைச் சொற்களும் பண்டைப் பாடல்களில் காணப்படுகின்றன. ஆனுல் அவைகளிலுள்ள வட சொற்கள் வடமொழியி னின்றும் நேரே வந்தனவல்ல. பாகதவடிவில் தமிழில் வந்து புகுந்தனவாம். உதாரணமாக, பாசி, ஊசி என்பன 'பாசிச் செல்லாது ஊசி முன்னுது' (229) எனப் புறநானூற்றில் வருகின்றன. இச்சொற்கள் முறையே கிழ்த்திசை, வடதிசை என்று பொருள்படும்; ப்ராசி, உதீசி என்பன இவற்றிற்குரிய வடசொற்கள். திசைச் சொற்களும் மிக அருகியே வந்துள்ளன. 'நெய்யுலை சொரிந்த மையூன் ஓசை' (261) என்ற இடத்து 'ஓசை என்றது ஆகுபெயரான் ஓசையையுடைய கறியை; இஃது ஒரு திசைச்சொல்' என்று உரைகாரர் எழுதினர். பிற் பட்ட காலத்திலே அளவற்ற வடசொற்கள் குடி புகுந்தன. தேவாரத்தில் ஒரு பக்கம் திருப்பிப் பார்த்தால் போது

மானது ; 100-க்கு 20 விழுக்காடு வட சொற்கள் காணப் படும். எனவே முதலில் சமயம் பற்றிய சொற்களே மிகுதியாய் ஆளப்பட்டன. பின்னர், தத்துவநூல் பற்றிய சொற்கள் இன்னும் மிகுதியாய்க் கொள்ளப்பட்டன. வர வர வட சொற்கள் மிகுந்து மணிப்பிரவாள நடையென ஒன்று கி. பி. 9-ம் நூற்றாண்டளவில் தோன்றத் தொடங் கிற்று. கன்னடம், தெலுங்கு, மலையாளம் முதலிய மொழி களை வடமொழி விழுங்கிவிட்டதுபோல் தமிழ் மொழியை அது விழுங்கிவிடவில்லை. இது தமிழின் இயற்கை யாற் றலையும் நம் மூதாதையாது அறிவின் திட்பத்தையும் நன் குணர்த்துகிறது. திசைச் சொற்களும் வரவரப் பெருகி விட்டன. அக்கம்பக்கத்திலுள்ள கன்னடம், சிங்களம், தெலுங்கு, துலுக்கு, போர்த்துகீசியமொழி, டச்சு மொழி, பிரஞ்சு, ஆங்கிலம் முதலியவற்றுக்குரிய சொற்களும் தமி ழில் வந்து புகுந்தன. புறநானூற்றுச் செய்யுட்கள் தோன் றியபின் இரண்டாயிரம் ஆண்டுகளாக இத்தனை மொழிச் சேர்வுகளும் ஏற்பட்டுள்ளன. இச்சொல் - தொகுதியே யன்றி வாக்கிய அமைதியும் சிறிது சிறிதாக மாறியுள்ளது. உதாரணமாக 'அருங்கேடன்' என்பது கேடு அரியன் அதாவது கேடு இல்லாதவன் என்று பொருள்படும். இத் தொடர் வடமொழி வாக்கிய அமைதியைப் பின்பற்றியது. பள்ளிச் சிறுவர்கள் 'நான் உடைத்தாயிருக்கிறேன்' என்று பாடம் படிப்பதை நாம் அடிக்கடி கேட்கிறோம். இது ஆங்கில வாக்கிய அமைதியைப் பின்பற்றியது. யாழ்ப்பா ணத்து உலக வழக்கில் வழங்கும் வாக்கிய அமைதி நமக் குப் புதுமையாகவே இன்றும் உள்ளது. தமிழிற்கு இயல்பா யுள்ள வாக்கிய அமைதியினின்றும் வேறுபட்டுப் பல புத் தமைதிகளும் இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தோன்றி வந்திருக்கின்றன.

மேலே பல மொழிகளுக்கும் உரிய சொற்களைக் குறித்தோம். அந்தச் சொற்கள் எல்லாம் நமது நாட்டிற்கும் பிற நாடுகளுக்கும் இருந்த தொடர்பினால் ஏற்பட்டன. அத்தொடர்பிற்கு அறிகுறியாகவும் உள்ளன. இத்தொடர்புகளும் பல காரணங்களால் உண்டாயின. வாணிகம், குடியேற்றம், சமயம், அரசாட்சி, கூலிப்படை முதலியன இக்காரணங்களுள் ஒருசில. இங்ஙனமுள்ள கூட்டுறவுகளெல்லாம் கால-அடைவில் வரவர நிகழ்ந்தனவாகும்.

இங்கே கூறினவெல்லாம் சுமார் இரண்டாயிரம் ஆண்டுகளாகப் புறத்தே கண்கூடாக நிகழ்ந்த நிகழ்ச்சிகள். கண்ணுக்கு அப்பாற்பட்டதாய் அகத்தே - உள்ளத்திலே - கருத்துலகிலே நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை வரையறை செய்து கூறுதல் அருமையினும் அருமை. ஆங்கிலேயராட்சி நிலைபெற்றதன் பின்னர் நமது உள்ளப்பாங்கில் ஏற்பட்டுள்ள வேறுபாடுகளைக் கவனித்தால் நான் சொல்வதன் உண்மை நன்கு புலப்படும். நமது சமயக்கொள்கைகளிலே, சமுதாயக் கொள்கைகளிலே, இல்வாழ்க்கைக் கொள்கைகளிலே, அரசாட்சிக் கொள்கைகளிலே, கூட்டுறவுக் கொள்கைகளிலே, கல்விக் கொள்கைகளிலே, இன்னும் எத்தனையோ வகையான கொள்கைகளிலே நமது மனப்பாங்கு பெரிதும் வேறுபட்டுவிட்டது. இதனை யாவரும் எளிதில் உணரக்கூடும். ஆங்கிலேயராட்சி நமது நாட்டில் நிலைபெறத் தொடங்கி 150 ஆண்டுகளே ஆகின்றன. இச்சுருங்கிய காலத்தில் இத்தனை வேறுபாடுகள் நமது கருத்துலகிலே தோன்றியனவாயின், இரண்டாயிரம் ஆண்டுகளில் எத்தனை வேறுபாடுகள் இக்கருத்துலகில் தோன்றியிருக்கக்கூடும் என்பதை நாம் ஊகித்துக்கொள்ளலாம்.

நமது காலத்திற்கும் புறநானூற்றுச் செய்யுட்கள் தோன்றிய காலத்திற்கும் இடைப்பட்ட மிக நீண்ட

காலத்தில் புறவுலகிலும் அகவுலகிலும் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளை இங்கே சிறிது விரிவாகக் கூறியது ஒரு பயன் கருதியாகும். 'ஏதோ இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன்பு' என்று லகுவாகச் சொல்லளவில் உணர்ந்து கொண்டாற் போதாது. காலத்தின் ஒவ்வொரு பகுதிக்கும் பொருண்மையுண்டு. ஒவ்வொரு பகுதியும் அகம் புறம் என்ற இருவகை யுலகிலும் நிகழ்ந்துள்ள நிகழ்ச்சிகளால் நிரம்பியிருக்கின்றது. நூற்றாண்டுக்கு நூற்றாண்டு வேறுபாடு; தலைமுறைக்குத் தலைமுறை வேறுபாடு. பின் தலைமுறையிலுள்ளார் முன்னுள்ள தலைமுறையாரினின்றும் விலகி வேறுபட்டு வந்திருக்கிறார்கள். இவ்வேறுபாடு வரவரப் பெரிதாகி வளர்ந்தது. முடிவு யாது? நாம் இப்போது வாழும் உலகம் வேறு; நமது மூதாதையர்களான புறநானூற்றுக் கவிஞர்கள் வாழ்ந்த உலகம் வேறு. இவ்விரண்டு உலகங்களும் தேசம் இடையிட்டவையல்ல; காலம் இடையிட்டவையாகும். புறநானூற்று உலகிற் புகுந்து அக்கவிஞர்களது சித்தவிருத்தியை அறிவதற்கும் அவர்கள் கூறுவனவற்றை நன்கு உணர்ந்து கொள்வதற்கும் மிக்க முயற்சி இன்றியமையாததாகும். அம்முயற்சியை ஆராய்ச்சியாளர் செய்துவர வேண்டும். அதற்கும் நமக்கும் யாதொரு தொடர்பும் இல்லை. நமக்கு வேறு வகையான பயனை இவ் அரியநூல் தரவல்லது. இக்காலத்து இளஞ் சகோதரர்களுக்கு வேண்டுவனவாகிய சில நன் மொழிகளையே, திருவாணைகளையே, (Messages) புறநானூற்றிலிருந்து இங்கே எடுத்துக்கூற விரும்புகிறேன்.

இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்புள்ளவர்கள் கூறும் கருத்துக்கள் நமக்கு எவ்வளவு பொருத்தமாகும் என்று சிலர் நினைக்கலாம். ஆனால் பெருங்கவிஞர்களெல்லாம் எக்காலத்துக்கும் பொதுவான கருத்துக்களை அங்கங்கே

கூறிச் செல்வர். பெருங்கவிஞர்க்குரிய இயல்புகள் பலவற்றில் இதுவும் ஒன்று என்று சொல்வது தவறாகாது. இப்பொதுக் கருத்துக்களேயன்றி அவர்கள் கூறியன வேறு சிலவும் காலதேச வர்த்தமானங்கட்கியையச் சார்த்தியுணரத் தக்கனவாம். அவற்றினின்றும் நமக்கு நன்மை பயப்பன சில உய்த்துணரத் தக்கனவாயிருக்கும். ஆதலால் இவ் ஐயப்பாடு வேண்டாததாகும்.

முதலாவதாக நாம் கண்டுகொள்ள வேண்டுவது ஒன்று உண்டு. நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக நமக்கு நாட்டுப்பற்று என்பது போய்விட்டது. நாட்டுக்காக உயிர் விடுதல் என்பதும் போய்விட்டது. வீரம் தீரம் என்பனவெல்லாம் அகராதியிற் காணும் சொற்களாய் முடிந்தனவேயன்றி, அவற்றிற்கும் நமது வாழ்க்கைக்கும் யாதொரு தொடர்பும் இல்லாமற் போய்விட்டது. நமது நாடு நலம் பெற வேண்டுமாயின், இந் நல்லுணர்ச்சிகளை நாம் மீண்டும் பெறுதல் வேண்டும். இங்ஙனம் பெறுதற்குப் புறநானூற்றுச் செய்யுட்களைவிட நமக்கு உற்ற துணை வேறு யாதுமில்லை. பாரி என்னும் வள்ளல் இறந்த பிற்பாடு அவனது பெண்மக்களும் கபிலரும் அவனது குன்றை நோக்கிக் கூறிய செய்யுட்கள் நமக்கு இந்நாட்டுப்பற்றை மீண்டும் தரவல்லன.

**அற்றைத் திங்கள் அவ்வெண் நிலவின்**
**எந்தையும் உடையேம் எம்குன்றும் பிறர்கொளார்**
**இற்றைத் திங்கள் இவ்வெண் நிலவின்**
**வென்றெறி முரசின் வேந்தர்எம்**
**குன்றும் கொண்டார்யாம் எந்தையும் இலமே!**

(112)

இச் செய்யுளிலே எத்தனை துன்பம்! தாங்கள் பெண்களாய்ப் பிறந்தமையால் இக்குன்றினை இழந்தோம் என்று கூடக் கருதுவதுபோல் தோன்றுகின்றது. தாங்கள்

இளமை முதல் இன்புற்று விளையாடி வளர்ந்த இக்குன்றை எளிதிற் பிரிய மனம் வரவில்லை.

ஈண்டுநின் றோர்க்குந் தோன்றும் சிறுவரை
சென்றுநின் றோர்க்குந் தோன்றும் மன்ற
களிறுமென் றிட்ட கவளம் போல
நறவுப் பிழிந்திட்ட கோதுடைச் சிதறல்
வாரசும் பொழுகும் முன்றில்
தேர்வீ சிருக்கை நெடியோன் குன்றே (114)

என்ற செய்யுளில் பிரியாவிடைபெற்றுப் பிரிகின்ற தன்மை எவ்வளவு நன்றாகப் புலப்படுகின்றது.

புறநானூற்றுக் காலத்தில் வாழ்ந்தவர்கள் ‘ஒரு பகல் வாழ்க்கைக்கு உலமருதல்’ (அதாவது வருந்துதல்) மிகவும் இழிவானதென்று கருதினார்கள். போர் புரிந்து வாழும் வீர வாழ்க்கையே வாழ்வென்று கொண்டார்கள். வீர னுக்கே பேரழகியுரியள் என்ற கொள்கையும் இருந்தது.

திருநயத் தக்க பண்பினிவள் நலனே
பொருநர்க் கல்லது பிறர்க்கா காதே (342)

என்ற அடிகளால் இதை உணரலாம். போரிடை வீழ் தலையே நன்மரணமாக மதித்தார்கள். அம்மரணம் பெறாத விடத்துப் பெறாதவனைத் தருப்பையிற் கிடத்தி வாளால் இருகூறுபடுத்து வீரமரணம் பெறும்படிச் செய்தனர். போரில் முதுகுகாட்ட நேரிட்டால், உண்ணாவிரதமாய் வடக்கு நோக்கியிருந்து உயிர் துறந்தார்கள். ஒருவன் செய்த வீரச்செயலைப் பாருங்கள் :

வேந்துடைத் தானை முனைகெட நெரிதர
ஏந்துவாள் வலத்தன் ஒருவனாகித்
தன்னிறந்து வாராமை விலக்கலிற் பெருங்கடற்கு
ஆழி யனையன் மாதோ என்றும்
பாடிச் சென்றோர்க் கன்றியும் வாரிப்
புரவிற் காற்றாச் சீறூர்த்
தொன்மை சுட்டிய வண்மை யோனே. (330)

இவ்வகை வீரனது புகழுடம்பைத் தமிழ் மக்கள் தெய்வமாக்கி நடுகல் அமைத்து வணங்கிவந்தனர். ஒவ்வொருவர்க்குமுரிய கடமைகளைக் கூறும் இச் செய்யுளைக் கவனியுங்கள் :

ஈன்று புறந்தருதல் என்றலைக் கடனே
சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே
வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே
நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே
ஒளிறுவா ளருஞ்சமம் முருக்கிக்
களிறெறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே
(312)

தேசப்பற்றையும் வீரவுணர்ச்சியையும் நாம் மீண்டும் பெறுதற்கு வேண்டும் உள்ளக் கிளர்ச்சி புறநானூறு என்ற இப்பண்டை நூலில் கிடைப்பதுபோல் வேறு எவ்விடத்தும் இல்லை. இரண்டாவதாக, சமூக சேவையை நோக்குவோம். இக் கருத்தை ஓர் அழகிய செய்யுள் மிக அழகாக விரித்துக் கூறுகின்றது :

உண்டால் அம்மஇவ் வுலகம் இந்திரர்
அமிழ்தம் இயைவ தாயினும் இனிதெனத்
தமியர் உண்டலும் இலரே முனிவிலர்
துஞ்சலும் இலர்பிறர் அஞ்சுவ தஞ்சிப்
புகழெனின் உயிருங் கொடுக்குவர் பழியெனின்
உலகுடன் பெறினுங் கொள்ளலர் அயர்விலர்
அன்ன மாட்சி யனைய ராகித்
தமக்கென முயலா நோன்றாட்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே ! (182)

இச் செய்யுளிலே 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்' என்ற கருத்து நயம்பெற உரைக்கப்பட்டுள்ளது. சமூக

சேவையில் உயிர்நாடி எதுவோ அதைத் தேர்ந்தெடுத்து அதனை ஓர் ஆணையாக நமக்குத் தந்திருக்கிறார் ஆசிரியர். இவ்வுண்மை எல்லாக் காலத்தார்க்கும் எல்லாத் தேசத் தார்க்கும் பொதுவல்லவா? இதற்கு இலக்கியமாக நாம் யாரைக் கொள்ளுதல் கூடும்? காந்தியடிகளைத்தான் கூறு தல் வேண்டும்.

இங்குக் கூறிய நெறியிலேசென்றவன் சமூகத்திற்கு உண்மையான தொண்டு இயற்றியவனாவான். ஒன்று மனங் கொள்ளத்தக்கது. நாட்டு மக்கள் பசியால் ஆயிரக்கணக் காய் மடிந்து வருகிறார்கள். அவர்களை நம்மால் இயன்ற வரைக் காப்பாற்றுதல் நமது கடமை. இயன்ற அளவு பொருளாலும் பிறபடியாலும் உதவிசெய்தலை நாம் மேற் கொள்ளல் வேண்டும். புறநானூற்றுப் புலவரொருவர் இவ்வாறு உதவிவந்த வள்ளலுக்கு ஒரு பட்டம் அளித் திருக்கிறார்: 'பசிப்பிணி மருத்துவன்' என்று.

பசிப்பிணி மருத்துவன் இல்லம்
அணித்தோ சேய்த்தோ கூறுமின் எமக்கே (173)

இவ் அடிகள் என்றும் நமது ஞாபகத்தில் இருத்தல் வேண்டும்.

சமூகத்தைப் பற்றிக் கூறும்பொழுது சமூகத்துக்கு அச்சுப் போன்றிருக்கும் பெண்களைக் குறித்துச் சொல்லு தல் அவசியம். ஒரு சமுதாயம் பெண்களுக்குக் கொடுத் திருக்கும் உரிமையினின்றும் அதனுடைய நாகரிகத் தன்மையும் பண்புமேம்பாடும் (Culture) உணரப்படும் என்று கூறுவர். நமது நாட்டில் அவர்களை வெகுகாலமாக அடிமைகளாகவும் ஆடுமாடுகள் போலவும் நடத்திவந்திருக் கிறோம். புறநானூற்று முன்னையோர் அவ்வாறு கொள்ள வில்லை. அவர்களை மிக்க கௌரவத்தோடு நடத்திவந் திருக்கிறார்கள்.

**மனைக்கு விளக்காகிய வாணுதல் கணவன்** (314)

என்று புறநானூற்றுப் புலவரொருவர் கூறுகிறார். இதனால் பெண்களை மிகப் பெருமையோடு போற்றிவந்தார்கள் என்பது விளங்கும். மனைவி கணவன் என்ற இருவரிடையுமுள்ள அன்பு பற்பல வகைகளில் உணர்த்தப்படுகின்றது. ஏகபத்தினி விரதமே தக்கதென ஒரு புலவர் உய்த்துணர வைக்கின்றனர்.

**வடமீன் புரையும் கற்பின் மடமொழி**
**அரிவை தோளள வல்லதை**
**நினதென இலை நீ** (122)

என்பது ஒரு புறப்பாட்டு. கணவன் இறந்தவுடன் மனைவி இறத்தலை 'சககமனம்' எனப் பெயரிட்டு ஒரு சமுதாய வழக்கமென்று கூறிவிடுவர். ஆனால் ஓர் அரிய செய்யுளில் தன் அரும்பெறல் மனைவி இறந்தும் தான் உயிர்வாழ்ந்திருப்பதை நினைத்து ஒரு கணவன் புலம்புகின்றான்.

**ஞாங்கர் மாய்ந்தனள் மடந்தை**
**இன்னும் வாழ்வல் என்னிதன் பண்பே** (245)

என்ற அடிகளில் இச்செய்தி புலப்படுகிறது.

கல்வியின் பெருமை யாவரும் நன்கறிந்ததேயாம்.

**யாதானும் நாடாமால் ஊராமால் என்னொருவன்**
**சாந்துணையும் கல்லாத வாறு**

என்றனர் வள்ளுவர். 100க்கு 93 பேர் எழுத்துவாசனையற்றிருக்கும் நம் நாட்டினர்க்குக் கல்வியின் இன்றியமையாமையைப் பின்வரும் செய்யுள் மிகத் தெளிவாகவும் அழுத்தமாகவும் வற்புறுத்திக் கூறுகின்றது.

**உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்**
**பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே**
**பிறப்போ ரன்ன உடன்வயிற் றுள்ளும்**
**சிறப்பின் பாலால் தாயும் மனந்திரியும்**
**ஒருகுடிப் பிறந்த பல்லோ ருள்ளும்**
**மூத்தோன் வருக என்னாது அவருள்**

*அறிவுடை யோனறு அரசுஞ் செல்லும்*
*வேற்றுமை தெரிந்த நாற்பா லுள்ளும்*
*கீழ்ப்பா லொருவன் கற்பின்*
*மேற்பா லொருவனும் அவன்கட் படுமே !* (183)

இனி நாம் மேற்கொள்ளவேண்டும் குறிக்கோள் சிலவற்றைக் காண்போம். நாம் அறஞ் செய்து வாழவேண்டும் என்று பலவழியாலும் புறநானூற்றுச் செய்யுட்கள் உணர்த்துகின்றன :

*சிறப்புடை மரபின் பொருளும் இன்பமும்*
*அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல* (31)

என்று ஒரு புலவர் கூறுகின்றார். இங்கே புலவர் அரசனது குடையை வருணிக்கின்றார். 'பொருளும் இன்பமும் அறத்தின் பின்னே தோன்றும் காட்சிபோல, சேர பாண்டியருடைய இரண்டு குடையும் பின்னாக ஓங்கிய நினது ஒன்றாகிய வெண்கொற்றக்குடை' என்பது கருத்து. இவ் அறத்தின் வழியே செய்யப்படுகின்ற நல்வினை யொன்றுதான் நமக்கு உறுதுணையாவதென்று ஒரு புலவர் வற்புறுத்துகின்றார்.

*வாழச் செய்த நல்வினை யல்லது*
*ஆழுங் காலைத் துணைபிறி தில்லை* (367)

என்பது அவர் கூறிய பாட்டு.

இந்த நல்வினையைத் திரட்டியவர்களே 'நல்லவர்' என்ற பெயர்க்கு உரியர். அவர் வாழுமிடமே நல்லதாயிருக்கும் என்று ஓர் கவிஞர் விளக்குகிறார் :

*எவ்வழி நல்லவ ராடவர்*
*அவ்வழி நல்லை வாழிய நிலனே* (187)

என்பது அக்கவிஞர் நன்மொழி.

இங்ஙனம் நல்லராய் வாழ்ந்தோர்க்கே இவ்வுலகத்துப் புகழுண்டு; ஏனையோர்க்கு மேலுலகத்தும் நற்பேறு இல்லையென்று ஒரு புலவர் பறைசாற்றுகின்றார் :

இவணிசை யுடையோர்க் கல்ல தவணது
உயர்நிலை யுலகத்து உறையுளின்மை (50)

என்ற அடிகள் இவ்வாறு முழக்குகின்றன. இகவாழ்விற்குரிய தத்துவ நன்மொழியை (Philosophy of life) கீழ்வருஞ் செய்யுள் நன்றாக உணர்த்துகின்றது.

யாதும் ஊரே யாவரும் கேளிர்
தீதும் நன்றும் பிறர்தர வாரா
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன் றும் இலமே முனிவின்
இன்னா தென்றலு மிலமே மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ யானாது
கல்பொரு திரங்கு மல்லற் பேரியாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை யிகழ்தல் அதனினும் இலமே! (192)

இவ்வாறாக, இப்புறநானூறு பல நூற்றாண்டுகட்கு முன்பு தோன்றியதேயாயினும் இக்காலத்துக்குரிய நெறிகளையும் எக்காலத்துக்கும் உரிய உண்மைகளையும் நமக்குக் காட்டிக்கொண்டு நிற்கும் கலங்கரை விளக்கமாகத் திகழ்கின்றது. இந்நூலினைக் கற்றுப் பயனடைதல் தமிழ் மக்கள் அனைவர்க்கும் கடனாகும். கற்றற்கு வேண்டும் உள்ளத்தையும் தகுதியையும் தமிழ்ப்பற்றையும் உண்மைத் தமிழுணர்ச்சியையும் இறைவன் நமக்கு அருள்புரிவானாக.

---

# க. இலக்கியப் பண்பு

மன்னு உலகத்து மன்னுதல் குறித்து ஆன்றோர்கள் இயற்றிய நூல்கள் அனைத்தும் இலக்கியமென்றே கூறப் படும். இலக்கியம் என்ற சொல்லின்கண் பாடல், வசனம், நாடகம் என்ற அனைத்தும் அடங்கும். இவை மூன்றும் இதனுள் அடங்குமேனும் இவற்றுள் சிறந்து நிற்பன செய் யுட்களே. ஏனைய இரண்டினையும் விடச் செய்யுட்கள் சிறப் படையப் பல காரணங்கள் உள. சுருங்கக்கூறல், விளங்க வைத்தல், உணர்ச்சி யூட்டல், இராகத்திற்கு ஒத்து வரு தல் முதலியன அவற்றுட் சிலவாம். இச்செய்யுட்களை யும் இரண்டு வகையாகப் பிரித்தல் கூடும். முதல் வகை யைப் 'பாடல்கள்' என்றும் இரண்டாம் வகையைச் செய் யுட்கள் என்றுங் கூறலாம். பாடல்கள் என்று அழைக்கப் படுவனவும், செய்யுட்களும் உருவத்தானும், வடிவத்தா னும் ஒத்திருப்பினும் மேலே கூறிய காரணங்களால் தம் முள் மாறுபாடுடையன. முன்னையது பாடவேண்டுமென்ற தொரு கட்டுப்பாட்டுக்கு இணங்கிப் பாடப்படுவதன்று. செய்து தீரவேண்டுமென்ற விடத்துச் செய்யப்படுவதே செய்யுளாம். முன்னையது யாம் கூறியபடி அமைவதோ டின்றிப் பாடுகின்ற ஆசிரியனது மனநிலையையும்பொறுத்து வெளி வருவதாம். இதனைத்தான் நாவின் வேந்தர் நன் குணர்ந்து 'உளங்கனிந்த போதெலாம் உவந்து உவந்து பாடுமே' என்று கூறினர். எனவே, பெரிதும் கவிஞனின் மனநிலையை ஒட்டி வெளிவரும் இப்பாடல்கள் என்று கூறின மாத்திரையானே, அவை கட்டுப்பாட்டிற்கு அடங்

காதவை என்ற உண்மை தானே பெறப்படுகின்ற தன்றோ! ஆகவே இப்பாடல்களையும் செய்யுட்களையும் உணர்வோடு படிப்போர்க்கு இவற்றிடையே உள்ள வேற்றுமை தெற்றென விளங்கும்.

உணர்வோடு படிப்பதாவது என்னையெனின் பாடல்களை அவற்றிற்காகவே பயில்வதாம். வேறு பயன் கருதிக் கற்றவழிக் கவிஞனின் உட்கோளை உணர முடியாதுபோய் விடும். அதாவது சிறந்த பாடல்களைப் படிப்பதால் உண்டாம் இன்பமே படிப்பதன் கைம்மாறும். எனினும், மனப் பண்பை மாற்றியமைத்தல் முதலிய பிறதொழில்களும் பாடல்கட்கு உண்டேனும், சிறந்ததாகக் கருதப்படுவது, படிக்கும்பொழுது தன்னைமறந்து அனுபவிக்கும் இன்பமே யாம். இது மேலைநாட்டாருக்கும் ஒப்பமுடிந்த தொன்றும். இக்கருத்தையே வலியுறுத்துவான் வேண்டிக் கம்பநாடரும் "செஞ்சொற் கவியின்பம்" எனக் கூறியிருத்தல் காண்க.

இத்தகைய பாடல்களைப் பயிலும்போது படிப்போர் மனம், அவர் காலத்திய உலகம், நடை, உடை, பாவனை களில் ஈடுபட்டிருக்குமேயானால், அப்பாடலுலகிற் புகுந்து முழு இன்பத்தை அடைய முடியாதென்பது ஒருதலை. காவியம் என்பதே ஒரு தனி உலகாக, ஏனைப்புற உலகின் துணை வேண்டப்படாத நிலையில் இருப்பதாகலின், அதன்கட் புக விரும்புவோர் மனத்தைத் தூய்மைப்படுத்தி அக்காவிய உலகிற் புகினன்றி அதனை அனுபவித்தல் இயலாதாம்.

பாடல்களுக்குரிய மேலே குறிக்கப்பட்ட தன்மை யுடைய பாடல்கள் எதுவாயினுஞ் சரி அவை பெருமை பெறுவது எதனுன் என்று ஆராயப்புகின், அது சற்று இயலாத காரியமேயாம். உதாரணமாக 'அற்றைத்திங்கள் அவ்வெண்ணிலவின்' (112) என்ற புறப்பாட்டை நோக்கு வோமாயின், அதன்கண் உள்ள சுருங்கக்கூறி விளங்க

வைக்கின்ற அழகும், தந்தையை இழந்து வருந்தும் மங்கையர் துயராம் அவலச் சுவையும், 'வென்றெறி முரசின் வேந்தர்' என்ற வஞ்சப் புகழ்ச்சியும் படிப்பாரது மனத் திற்பட்டு உருக்காமற் போகா. ஆனல் மேலே கூறிய பொருள், பாடலின் எப்பகுதியில் உள்ளது? சொற்களோ யாரும் அறிந்த மிக எளிய சொற்கள். கூறப்பட்ட செயலோ யாவரும் அறிந்ததே. பெரிய கதையோ, காப்பியப் பொருளோ ஒன்றும் ஆண்டில்லை. அவ்வாருக இத்தனை அழகும் யாண்டுத் தோன்றியது? அது பாடுவோரின் திறத்திற் ருேன்றிற்று என்று கூறுவதே ஒரு வகை விடையாம். அவ்வாறின்றி மேலே கூறிய ஒன்ருல் இப்பாடல் சிறப்படைந்ததெனக்கொள்ளின் அது தவறும். பாடப்படுகின்ற பொருளால் பாடல் சிறப்படைகின்றது எனக் கூறுவதும் பொருந்தாது. மேலே கூறிய பாடலே இதற்குச் சான்றும். பெரிய பொருளை வைத்துங்கூடச் சாதாரண மனிதன் சாதாரணச் செய்யுளைத் தான் செய்வான். ஆனல் கவிஞன், பொருளெனப் பிறரால் மதிக்கப் படாத சிறிய பொருளை வைத்தும் யாவரும் வியக்கத்தக்க பாடலைப் பாட இயலும். அதனலே இத்தகைய பாடல்களில், சொல்லமைப்போ,அன்றி வேறெதுவோ சிறப்பைத் தருவதில்லை. உண்மையைக் கூறுமிடத்து, இப் பாடல்களில் மேலே கூறிய பாகுபாடுகள் செய்வதும் இயலாத காரியம். "இடைப்படக் குறுகுறு நடந்து சிறுகை நீட்டி இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும் நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்" (188) என்ற அறிவுடை நம்பியின் பாடலைப் படிக்கும்பொழுது, உண்மையாகவே குழந்தை இல்லாதவரும் தமக்கு ஒரு குழந்தையைக் கற்பனை உலகிலேனும் உண்டாக்கிக் கொண்டு, அது மேலே கூறியபடிச் செய்வதாக நினைத்து மகிழ்வர். இவ்வெண்ணங்கள் படித்

துச் செல்லும்போதே உண்டாகின்றனவேயன்றி ஒவ்வொரு சொல்லேயும் படித்துப் பிறகு கண்ணே மூடிக் கொண்டு அச்சொல்லின் பொருளேச் சிந்தித்து யாரும் உணருவதில்லே. இத்தகைய பாடல்களில் ஒரு சொல்லே மாற்றி யமைத்தோ அன்றி அடியைப் பெயர்த்தோ கூறிப் பார்க்கின் உண்மை விளங்கும். உண்மைப் பாடல்களே நன்கு பழகிய செவிகள் அம்மாற்றத்தை ஏற்றுக் கொள்வதில்லே. இசையில் 'அபசுரம்' என்பது தோன்றும் பொழுது என்ன மனேநிலே உண்டாகிறதோ அதுவே ஈண்டும் உண்டாகக் காணலாம். சொற்களின் ஓசையும் பொருளமைதியும் ஒருங்கே ஈண்டுத் தோன்றுவதனுற்றுன் இவற்றைப் பாடல்கள் எனக் கூறுகிறேம். அக்கவிஞனே யல்லாது வேறு யாரும் அங்ஙனம் அமைக்க வியலாது என்றும் கூறுகிறேம். அத்தகைய பாடல்களேப் படிக்கையில் கவிஞன் கூறவந்த பொருளேப் பிறர் உணருமாறு கூறிவிட்டதான ஒரு உணர்ச்சியும், 'இதுவே நாம் தேடி அலேவது, அதனே ஈண்டுக் காண்கின்றேம்' என்றதொரு உணர்ச்சியும் தோன்றுகின்றன. காரிகை கற்றுக் கவிபாடி, எதுகை மோனேக்கு இடருற்றுச் சதுரகராதியின் உதவியைத் தேடி, அமைக்கப்பட்டதும் செய்யப்பட்டதுமான செய்யுட்கள் பிறரைக் கவராததன் காரணம் இதுவே.

கட்வுளேக் கூறவந்த ஒரு கவிஞன், "கைபுனேந் தியற்ருக் கவின்பெறு வனப்பு" என்று கூறினன். அவனுக்குப் பிறகு 2000 ஆண்டுகள் கழித்துப் படிக்கும் நாம், படித்த உடனே மனத்தில் தேடியதைக் கண்ட மகிழ்ச்சி யடைகின்றேம். மேலே கூறிய நான்கு சீர்களே எத்தனேச் சொற்களாலே வேண்டுமாயினும் கூறிப் பார்ப்போம். அப்பொருளமைதியை, அச்சொல் லமைதியின் பண்பை, நாமடைதல் இயலாத காரியம். அங்கே தான் உண்மைப் பாடலின் பண்

யையும், அதனை இயற்றிய கவிஞனது மன அமைதியையும், காண்கின்றோம். நம்மை ஒத்த மனிதனாகப் பிறர்க்கு அவன் காணப்படினும், உண்மையில் நம்மைவிடப் பல படிகள் மேலே இருப்பவன் அவன் என்ற உண்மை விளங்குகிறது.

இத்தகைய சிறந்த பாடல்கள் அப்புலவன் மனத்தில் முன்னமேயே கருக்கொண்டிருந்த பெருங் கருத்தின் உருவம் எனக் கொள்வோமேயானால் அது பொருத்தமிலாக் கூற்றாய் முடியும். பாடல்களைப் பாடுவதன்முன் உருவகிக்க முடியாது பனிப்படலம்போன்று, கவிஞன் மனத்துட் கிடக்கின்ற உணர்ச்சியே பிறகு அவனது ஆக்குந் திறத்திற்கேற்ப ஒரு சொற்போர்வை போர்த்து வெளிவருகிறது. முன்னரே அவன் பாடற்பொருளை உணர்ந்திருப்பானாயின் அதனைப் பாடியே இரான். தன்னைச் சிறுவன் என நினைந்து எள்ளி, எழு அரசர்கள் தன் நாட்டை வளைத்தனர் என்ற செய்தியைக் கேட்ட அரசக் கவிஞன் மனத்தில் இன்னது பாடவேண்டும் என்ற எண்ணம் கருக்கொண்டிருக்க முடியாது. அவனை உணர்ச்சி ஆட்கொண்டு இருந்தது. ஓரிரண்டு சொல்லும் பொருளும் அவன் மனத்தில் தோன்றி இருத்தல் கூடும். அவ்வுணர்ச்சி சிறிது சிறிதாகச் சொல் வடிவங்கொண்டு வெளிவருகின்ற நிலையில்தான் பின்னர் வரவேண்டிய கருத்துக்கள் தோன்றும். ஆகவே, 'நகுதக்கனரே நாடுமீக்கூறுநர்' (72) என்று கூறியபிறகே அவர்கள் நகுதற்குரிய காரணமும் அவர்கள் கூறிய சொற்களும், அதற்குத் தான் அளிக்கும் விடையும், தான் இனியாற்ற வேண்டிய செயலும் ஒன்றன் பின் ஒன்றாய்த் தோன்றுகின்றன. இத்தகைய பாடல்களைப் படித்தவுடன் இவை கவிஞன் உள்ளத்தில் பொள்ளெனப் பொங்கிய பாடல்கள்என்பதும் ஏனையபாடல்களைப்

போல முயற்சி செய்து இயற்றப்பட்டவை அல்லவென்பதும் தெற்றென விளங்கும். இதனை ஷெல்லி என்ற மேலை நாட்டுக் கவிஞர் Spontaneous outburst என்றும் Unpremeditated art என்றுங் கூறுவர். இதனையே Dr. Bradley, 'It is a creation and not a manufacture and they possess the magical effect which decoration cannot produce' என்று கூறுகிறார். எவ்வளவு அணிகளை வைத்தாலும், எதுகை மோனைகளைக் கொட்டினாலும், செய்யுள் செய்யுளே. யமகம் திரிபு முதலிய செய்யுட்களிடத்து இத்தகைய பேரானந்தத்தைக் காணவியலாது. அதற்கு மாறாக ஆசிரியனது வன்மையை வியக்கின்றோம். அதோடு நின்றுவிடுகிறோம். இப்பாடல்களைப் படிக்கையில் ஆசிரியனை மறக்கின்றோம். அப்பாடல்களின் எதிரே தலைகுனிந்து வணங்கி மகிழ்ந்து அதனை ஏற்றுக்கொள்கிறோம்.

இத்தகைய அருங்கருத்துக்களைக்கூட வசனத்தில் கூறின் அவை இத்துணைப் பெருமை அடைய இயலாது. பாடல்கள் மட்டுமே பொங்கி எழும் கருத்துக்களைக் கொண்டுவருகின்றன. உணர்ச்சியைத் தட்டி எழுப்பி உணர்ச்சி வடிவாகவே வெளிவரும் தன்மை பாடல்களுக்கு மட்டுமே உண்டு. மனிதமனம் எவ்வளவு உயரம் செல்ல முடியுமென்பதை அறியவேண்டின் பாடல் வழியாகவே காண இயலும். பாடல்கள் எனப்படுபவை ஏனையோர் கண்டுங் காணாத பொருள்களைக் காணுமாறு செய்வதாம். எனவே மனப்பண்பை மாற்றம் செய்தல், உணர்ச்சி யூட்டுதல், தளர்ச்சி யடைந்த மனத்திற்கு ஊக்கம் அளித்தல் முதலான தொழில்களைச் செய்வதும் பாடல்களின் இரண்டாவதான தொழில்களாம். இவற்றையெல்லாம் செய்வதால் பாடல்கள் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் கண்ணாடி

எனக் கூறுதல் மிகையாகாது. வாழ்க்கை எத்தகையதா யிருக்கவேண்டும் எனக் கூறும் பெரும் பாடல்கள் எல்லாம் பாடுவோனது மனத்திட்பத்தால் பெருமையடைவனவே யாம்.

இதுகாறும் பொதுவாகப் பாடல்களைப்பற்றிய பண்பு களிற் சில கண்டோம். இனிப் புறநானூற்றிற் காணப் பெறும் உண்மைகளிற் சிலவற்றைக் காண்போம். புறத் தைப்பற்றி முன்னர்ச் சில உண்மைகள் அறியப்பட்டுள் ளன. இவற்றிற் காணப்படும் பாடல்கள் எல்லாம் பாடல் வகையிற் சேர்ந்தனவேயாம். இவற்றைப் பாடியவர் பலர். பல ஊர்களைச் சேர்ந்தோர். ஒவ்வொருவரும் காவிய உள்ளம் படைத்தவராயினும் பலகாலத்து வாழ்ந்தவராவர். இவருட் சிலரே ஒரு காலத்து வாழ்ந்தவர். இவர்கள் பாடிய அளவாற் சிறியதும் பெரியதுமான இப்பாடல்கள் நாம் என்றுங் கண்டுங்காணாத பொருள்களையும் அவற்றின் தன்மைகளையும் எடுத்து விளக்குவனவாகும். பாட லுண்மை (Poetic Truth) என்று சொல்லப்படும் பண்பு இப்பாடல்களில் யாண்டும் மிளிரக் காணலாம். அதாவது இயற்கையின் தன்மையையோ, அமைப்பையோ, தோற் றத்தையோ, அல்லது மனித மனத்தின் இயற்கையையோ எடுத்து விளக்கவருங்கால் அவற்றின் உண்மைத் தன் மைக்கு மாறுபடாதபடி புலவன்கூற்று இருத்தல் வேண்டு மென்பதாம். இது ஏன் சிறந்ததாகக் கருதப்படுகின்ற தென ஆராயின் அதன் உண்மை விளங்கும். பாடல்கள் அடிப்படையில் வாழ்க்கையின் நிறைவு குறைவு கூறும் ஒரு கருவியாய் முடியும். பாடல்கள் பெருமையடைவதெல்லாம் வாழ்க்கையின் ஓயாத வினவாகிய, எவ்வாறு வாழவேண்டு மென்பதற்குத் தரப்படுகின்ற விடையைப் பொறுத்ததே யாம். அது புலவனுடைய அறிவு, ஆராய்ச்சி, அனுபவம்,

கருவிற்றிருவுடைய தன்மை (Genius), விசால நோக்கம், மனப்பான்மை, மன ஆழம் முதலியவற்றைப் பொறுத்துள்ளது. ஆகவே இவற்ருல் நிரம்பப்பெற்றவனும் வாழ்க்கையின் சிக்கை அறுக்க முயல்பவனும் ஆகிய ஒருவன் பாடல்கள் இயற்ற முற்படுவானேயாயின் அவை பெருமையுடையனவாய்த் திகழும். மேலும் வாழ்க்கையின் விளு, உலகந் தோன்றியகாலந்தொட்டு இருந்துவருகிறது. இதுகாறும் அதற்கு முடிந்த ஒரு விடைகண்டார் யாருமிலர் என்றே துணிந்து கூறலாம். தீர்க்கதரிசிகளும், கவிகளும் அவரவர்கள் தன்மைக்கேற்ப இவ் விளுவின் ஒவ்வொரு பகுதிக்கே விடை தந்து போயினர். எனவே அவருள் சிறந்தவரை எவ்வாறு பொறுக்குவோம் என ஆராயின், அவர்கள் விடை எவ்வளவுக்கெவ்வளவு உண்மையின் பக்கத்தில் வருகிறதோ அவ்வளவுக்கவ்வளவு அவர்களது பெருமை விரியும். ஆகவே கால வேற்றுமையால் இவர்கள் பெருமை உண்மையிற் குறைவதில்லை. அதற்கு மாருக, அது என்றும் நின்று தனது பெருமையை எக்காலத்தும், எந் நாட்டிலும் உணர்த்திக்கொண்டே இருக்கும். எனவே, அப்படிப்பட்ட சிறப்புடையன இப் புறப் பாடல்கள் என்னலாம்.

எனவே பலர் இயற்றிய இவற்றை Objective poetry என்று மேலைநாட்டார் கூறும் தொகுதியில் ஒருவகையாகச் சேர்க்கலாம். இப்பாடல்கள் எல்லாம் ஆசிரியப் பாவால் ஆனவை. ஆசிரியப்பாவிற்குள்ள தனிச் சிறப்பென்னவெனின், தாளம் முதலிய கட்டுப்பாட்டிற்கு உள்ளடங்கி நடவாது மனிதனின் எண்ணம் எவ்வாறு விரைந்தெழுகின்றதோ அதன்வழி வருவதாகும். தன் மனத்தில் கருவுற்றிருக்கும் கருத்தை ஆசிரியன் வெளியிட முற்படுகையில் இசைக் கட்டுப்பாடும், தாளக்

கட்டுப்பாடும், எதுகை மோனைக் கட்டுப்பாடும், இலக்கணக் கட்டுப்பாடும், அவை தடையின்றி வெளிவருவதற்குத் தடைசெய்வனவாய் உள. ஆகவே, அவ்வகைக் கட்டுப்பாடுகள் மிகுதியும் இல்லாததும், பெரிதும் எண்ணம் செல்கின்ற வழியே செல்வதுமான ஆசிரியப்பாவால் இப்பாடல்கள் அமைந்தது மிகுதியும் நோக்கத்தக்கது. ஒரோ வழிச் சொல்லடுக்கு முதலியன காணப்படுமேயன்றி யாண்டும் பொருளழகின் பொருட்டே சொற்கள் அமைந்திருப்பதைக் காணலாம். பிற்காலத்துத் தோன்றிய யமகம், திரிபு முதலிய பாடல்களில் சொல்லழகின் பொருட்டுப் பொருளமைதி இழக்கப்படுகின்றதைக் காண்கிறோம். எனவே, இவையெல்லாம் இல்லாத செவ்விய ஆசிரியப்பாமுறையில் திகழ்கின்றன புறப்பாடல்கள். மேலும் உணர்ச்சிப் பெருக்கும், கற்பனைப் பெருக்கும், விவகாரப் பெருக்கும் (Narrative) ஆசிரியப் பாவிலேயே இயன்றனவாம். ஏற்ற இடத்தில் ஏற்ற சொல்லை உபயோகிப்பதால் உண்டாகின்ற நிறைவுத்தன்மை (Precision in poetry) பாடல்களில் மிகுதியும் வேண்டப்படுகிறது. இதை நன்கு நோக்குமிடத்து இசையையும் தாளத்தையும் தனதுறுப்பாய்க்கொண்டு நடைபெறும் இசைப்பாடல்களில் இதுமிகுதியும் இயலாத காரியம் என்பது நன்கு விளங்கும். உதாரணமாகக் "கெடுகசிந்தை கடிதிவள் துணிவே" (279) என்ற பாடலை நோக்குவோமாக. தன் தமையனையும் கணவனையும் அணித்தே இழந்தாளொருதாய் மற்றோர் நாளும் செருப்பறை கேட்கின்றாள். தன் மகனை அழைத்துப் போருக்கு அனுப்புகிறாள். அவ்வடிகள் வருமாறு :

**இன்றும், செருப்பறை கேட்டு விருப்புற்று மயங்கி**
**வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித் துடீஇப்**
**பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி**

ஒருமக னல்ல(து) இல்லோள்
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே !

யாண்டும் எளிய சொற்களே காணப்படுகின்றன. எனினும் என்ன? ஒரு சொல்லை எடுத்துவிட்டுப் பிறிதொரு புதுச் சொற் புணர்த்துப் பார்ப்பின் உண்மைவிளங்கும். புலவன் மனோ தத்துவம் நன்குணர்ந்தவன். முன்னொருநாள் தமை யனையும் பின்னொரு நாள் தன் உயிரினுமினிய கணவனை யும் இழந்த தாய்க் கன்றோ, மற்றும் ஓர் நாள் செருப்பறை கேட்பதன் மனோநிலை தெரியும். அதனை நன்குணர்ந்த புல வன் இன்றும் என்ற சொல்லில் வைத்த உம்மையால் தாயின் மனோநிலையைமட்டுமல்ல அப்பாடலைப் பயில்வோர் மனோ நிலையையும் ஒருவாறு விளக்கிவிட்டான். இனி அந் நிலைக்குப் பிறகு தாய் என்ன நினைத்தாள்? வீரமறக்குடி மகளாகலின் போரிடத்து விருப்பங்கொண்டாள். எனி னும் தனது கைம்மையையும், ஒரே மைந்தன் குலவிளக் காக உள்ளானென்பதனையும் நினைத்தாள். உடனே தன்னையுமறியாது ஒரு மயக்கம், மருட்சி கொண்டாள். என்றாலும் என்ன! கடமையின் முன்பு எதுதான் நின்று போராட முடியும்? ஆதலால் மைந்தனை அழைத்து இன் னது சொல்வதென்று அறியாது வேலைக் கையிற்கொடுத் தாள். மைந்தன் குறிப்பறிந்து செல்லப் புறப்பட்டான். அப்பொழுதுதான் தனது கனவுலகிலிருந்து மீண்ட தாய் அவனது ஆடை புழுதிபடிந்திருப்பதைக் கண்டாள். உடனே 'வெளிது விரித்து' உடுத்தினாள். உடனே தாயினது மனப்பான்மை ஒரு முத்தமிடுமாறு செய்திருக் கும். அதனை ஆசிரியர் கூறாமற் கூறுகிறார். முத்தமிட்ட நிலையில் அவனது குஞ்சி திருத்தப்படாத நிலையிலிருப்ப தைக் கண்டாள்போலும். உடனே 'பாறுமயிர்க் குடுமி எண் ணெய் நீவினாள்'. பிறகும் தாழ்ப்பின் தன் மனத்தையே

தான் நம்பாதவள் போலத், தன் கலக்கத்தையும் வெளிக் காட்டாது 'செருமுகம் நோக்கிச் செல்க' எனக் கூறினாள். இவளது துணிவை மனக் கண்ணால் காணுகின்ற ஆசிரியனுக்கும் கூட இச் செயல் துணுக்கத்தை உண்டாக்குகிறது. தான் நேரே காணுவதுபோல் நினைந்து 'ஒரு மகனல்லதில்லோள்' என்ற நான்கு சொற்களாலும் தன் மனத்திற்றோன்றிய அவலச் சுவையைக் கொட்டிவிட்டான். இக் கருத்தையும் இச் சொல்லோவியத்தையும் மனத்துட் கொண்டு பாடலை மறுபடியும் படிப்போமானால் உண்மை விளங்கும். ஓர் எழுத்தையேனும் சொல்லையேனும் மாற்றவோ, எடுத்து வேறு போடவோ இயலாதென்பது தெற்றென விளங்கும். மேலும் கூறப்பட்ட செயல்கள் எல்லாம் மிக மிக விரைவில் நடைபெறுகின்றன. அதனை ஆசிரியன் இத்தகைய ஓசை நலமுடைய பாட்டானன்றிக் கலி முதலிய ஓசையால் பாட இயலாது. பாடினாலும் இப்பயனை அது விளையாது என்பது திண்ணம். இதனைத்தான் அதன் கண் நிறைவுத் தன்மை என வியக்கின்றோம். இதனை ஆசிரியர் தொல்காப்பியனார் 'நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும், மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக் குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்' என்ற செய்யுளியற் சூத்திரப் பகுதியால் விளக்கினார். முதுமொழி என்ற பகுதிக்கே மேற்குறித்த இலக்கணஞ் சாலும் எனக் கொள்ள வேண்டுவதின்று.

உலகிடைத் தோன்றிய எல்லாப் பொருள்களையும், நடைபெறும் எல்லாச் செயல்களையும் யாவரும் காண்கிறோம். ஆனால் காணுவோனது மனோநிலைக்கு ஏற்ப அப்பொருள், செயல்களினது உண்மைக் கருத்துத் தோன்றும். பெரியோர்களது பாடல்களும்

அத்தன்மையனவே. பயில்வோரது மனப்பண்பு, பரந்த நோக்கம் முதலியவற்றிற்கேற்ப அப் பாடல்களின் பொருளும் நயமும் விளங்குகின்றன. ஆகவே சிறந்த கவிஞன் ஒரு செயலைக் காணுவோனாயின் ஏனையோர் காணும் காட்சிக்கும் அவன் காணும் காட்சிக்கும் வேற்றுமை உண்டு. பொருளின் உட்கருத்தைக் காணக்கூடிய வன்மை அவனிடம் உண்டு. காண்பதோடில்லை : தான் கண்ட பேருண்மைகளைப் பிறர் காணுமாறு காட்டும் அரிய ஆற்றலும் அவன்பாலுண்டு. உலகியலையும், மக்கள் வாழ்க்கையையும், நீண்டகாலம் ஒரு புலவன் காண்கின்றான். அதன்கண் உள்ள நிறைவு குறைவுகளையும் நன்கு ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வருகின்றான். தான்வந்த முடிபு இயற்கை வாழ்வோடு ஒத்ததாயிருத்தல் வேண்டுமென்பதே அவனது குறிக்கோள். ஏனைய மக்கள் எல்லோரும் அவனைப்போலவே வாழினும் வாழ்க்கையின் உட்கோளை உணரும் பெற்றி அவர் மாட்டு இல்லை. ஆனால் புலவனிடம் அவ்வன்மை நிரம்பியிருக்கின்றது. ஆதலால் தான் காணும் பேருண்மைகளைப் பிறருக்கு எடுத்துக்காட்ட முற்படுகின்றனன். இன்று உலகம் போர் மயக்கத்தில் மூழ்கி உய்வழியின்றிச் சுழல்கிறது. மனிதமனத்தின் இயல்பு மாறுகின்றவரை உலகிடைப் போர் நிற்கப்போவதில்லை எனப் பலருங்கூறக் கேட்கின்றோம். ஆனால் அம்மனமாற்றத்திற்குரிய வழியைக் கூறும் வீரர் ஒருவரை இதுகாறும் உலகம் காணவில்லை. இத்தகைய போர்களின் அடிப்படையான காரணம் என்ன? எக்காரணம் அறுபடின் அதன் காரியமாகிய இப்போர்கள் ஒழியும் என்ற வினாக்கள் யார்மாட்டும் நிகழாமல் இருப்பதில்லை. சிலர் அது இன்றியமையாத ஓர் செயல் என்றுகூட எண்ணுவர். போர் நிறுத்தம் என்பது பகற் கனவு என்ற எண்ணமும் பலர்மாட்டுத் தோன்றுகிறது. 'இடைக்குன்

றார்கிழார்' என்ற ஒரு புலவர் இத்தகைய எண்ணமுடை யார். இது,

ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்
புதுவ(து) அன்(று)இவ் வுலகத்(து) இயற்கை (76)

என்ற அவாது பாடலால் தெரிகிறது. எனினும் இன்னுஞ் சிலர் அதனினுமேம்பட்ட அறிவு முதிர்ச் சியால் இவ்வுண்மைகளை ஆராய முற்பட்டனர். போர் முதலிய புற நிகழ்ச்சிகட்குக் காரணமாயிருப்பன மனத்துட் டோன்றுகிறவெறுப்பு முதலியவே யாமன்றோ! 'யான் பெரியன்' முதலிய ஆணவ வினைவால் போர் நிகழலாம். அன்றேல் தனக்குப் பிறர் தீங்குசெய்த தாக நினைப்பின் அதனை மறுப்பான் வேண்டிப் போர் நிகழலாம். இனிக் கீர்த்தி முதலியன பெறற்குக் கார ணம் போரே எனக் கருதியும் போர்நிகழலாம். எனவே மேற்கூறிய மூன்று காரணங்களில் பெரும் பாலும் பகைமையின் வித்துக்களும் அதன் வினை வாகிய போரின் வித்துக்களும் அடங்கக் காணலாம். இவ்வாறு உண்மை இருப்பதைத் தன் கூரிய அறிவால் கணியன் பூங்குன்றன் என்ற புலவர் பெருமான் காண் கின்றான். இங்ஙனம் உண்மை காணுவதே பிறர் அறிய இயலாத ஒரு சிறப்பாகும். ஆனால் புலவன் இவ்வுண்மை களைக் கண்டதோடு நிற்கவில்லை. இவற்றை நீக்குதற்கும் வழி கண்டான். மூன்று அரிய உண்மைகளை எடுத்துக் காட்டி மேலேகூறிய மூன்று காரணங்களையும் அடித்துவிடு கின்றான். முதலாவதாக உள்ள காரணம் 'யான் பெரியன்', ஏனையோர் ஆளப்பட வேண்டியவர், என் மாட்டு அடங்கி நடத்தற்கு உரியர், என்ற தவறான எண்ணமாகும். இதற்கு விடையாகப் புலவன் "யாதும் ஊரே யாவருங் கேளிர்'

என்று கூறினன். யாதும் நம்முடைய ஊர் என்ற எண்ணம் நன்கு மனத்தில் பதியுமானல் "இடஞ் சிறிதென்னும் ஊக்கந்துரப்பப்" பிறநாட்டைக் கைப்பற்ற வேண்டும் என்னும் எண்ணம் அற்றுவிடும். மேலும் யாவரும் கேளிர் என நினைக்கும் ஒப்பற்ற மனோநிலை கைவரப் பெறின் கேளிருள் போர் தொடுத்தல் கேவலமானது என்ற எண்ணமுந் தோன்றிப் போர்இல்லாது செய்துவிடும். இனி ஒருவேளை கேளிருள்ளும் போர் நிகழக் காண்டுமால், அஃதங்ஙனமாகப் புலவன் இவ்வாறு கூறியது பொருந்துமோவென ஐயுறுவார்க்குப் பின்னடியால் விடையிறுக்கின்றான். அக் கேளிருள் போர் நிகழக் காரணம் என்னையோவென நோக்கின் தனக்குத் தீங்கிழைத்தான் என அது முடியும். பிறன் தீங்கு செய்தான் என நினைத்த மாத்திரத்தானன்றிக் கேளிருள் இப்போர் நிகழஏதுவில்லை. ஆதலால் அங்ஙனம் தீங்கிழைத்தான் எனக் கருதும் ஒருவனை நோக்கிக் கவிஞர் பெருமான் "தீதும் நன்றும் பிறர்தர வாரா, நோதலும் தணிதலும் அவற்றோரன்ன" என அமைதி கூறுகின்றார். ஆதலால் உலகில் ஒருவர்க்கொருவர் தீங்கிழைத்தலென்பது இயலாத காரியம் என்பதை உணர்ந்து, வருந் துன்பங்கள் தம் வினைப்பயனாலேயே வருகின்றன என்பதையு முணர்ந்துவிடின் மேலே கூறிய காரணத்தாற் போர் நிகழ்தலும் பகைமை மூளுதலும் இல்லையாம். இனி உடற்கு நேரே ஒருவன் ஊறு செய்வானாயின் அதை விதியின் காரணமாக விளைந்தது என்றல் எங்ஙனம் பொருந்துமென வினவுவாரை நோக்கி, ஊறு விளைப்பினும் அது துன்பஞ் செய்வதாக நினைப்பதும் நினையாது விடுவதும் மனமாகலானும், அம் மனத்தாலதுவும் வினைப்பயன் என உணர்தல் கூடுமாயின் ஆண்டுப் பகைமை விளைதல் இல்லை எனக் கூறுவாராகி 'நோதலுந்

தணிதலும் அவற்ருேரன்ன' எனக் கூறினர். மேலும் பிறர் விளைத்ததாகக் கருதப்படுந் துன்பம் சாக்காட்டையே பயப்பினும் அதுவும் தனது வினைப் பயனுல் விளைந்த தென்று கொளல் வேண்டுமே தவிர வேறு நினைதல் ஆகா தென்றும், அச்சாவும் அஞ்சத்தக்க தன்றென்றுங் கூறு வார் 'சாதலும் புதுவதன்று' என்று கூறுவதோடு அப் பேராசிரியர் அமைந்தாரல்லர். வாழ்க்கையின் மாட்டுத் தோன்றிய அன்பாலேயே சாவில் அச்சம் உண்டாதல் இயற்கை. இப் பேருண்மையைப் பிறர் காணவியலா திருக்கக் கவிஞர்பிரான் காணுகின்ருர். ஆதலின் அதனைப் பரிகரிக்க வேண்டி 'வாழ்தல் இனிதென மகிழ்ந்தன்று மிலமே' எனவும் கூறினர். இனி இவற்றை எல்லாம் நன்கு உணர்ந்த வழியும் வாழ்க்கையில் வெறுப்பு, கோபம் என்ற உணர்ச்சிகட்கு இடங்கொடுப்பின் பின்னர் மேலே கூறிய வற்றைப் பாதுகாத்தல் இயலாது என்பது ஒருதலை. எத்துணை நீதிகளைக் கற்றிருப்பினும் இவை இரண்டு உணர்ச்சிகளையும் வளரவிடின், பிறகு பகைமையின் கார ணங்களை ஆய்ந்து உண்மையில் பகைமை என்பது இருத் தற்கில்லை, என உணரும் அறிவு தன் வேலையைச் செய்ய இயலாதாகலின், அவ்வுணர்வுகளையே அடியோடு கல்ல வேண்டுமென்பார் 'முனிவின் இன்னுதென்றலு மிலமே' என்றுங் கூறினர்.

இனி மூன்ருவதாகக் காணப்படுவது கீர்த்தி கருதிப் போர் விளைத்தலாம். கீர்த்தி என்பது ஏனையோரால் றரப் படும் புகழே. ஆதலால் பிறர் ஒருவரைப் பற்றிப் புகழ்ந்து பேசுமளவும் தனிப்பட்ட மனிதன் அப்புகழை அடையவே முயலுவான். ஆதலால் மக்களை நோக்கி ஆசிரியர் யாரை யும் அவ்வாறு புகழவும் வியத்தலும் வேண்டாம் எனக் கூறுகின்ருர். அவ்வாறு காரணமின்றிக் கூறின் அதனை

உலகம் ஏற்றுக்கொள்ளாதாகலின் ஏற்ற காரணங்களைத் தருகின்றார்.

உலகியலை நன்கு உணர்ந்த பூங்குன்றனார் ஏனையோர் கண்டுங் காணாத ஒருண்மையைக் காணுகின்றார். உண்மையாகவே செயற்கருஞ் செய்கை செய்து உலகிற்குப் பெரும் பயன் விளைக்கின்றார் யாதொரு புகழையும் அடையாது போகவும், போலியான செயல்களைச் செய்து மக்களினத்தை ஏமாற்றுகின்றவர் பெரும் புகழ் அடைதலை வியப்போடு காண்கின்றார். அவ்வாறு இருப்பதன் காரணத்தை ஆராய்ந்து ஆசிரியர் ஒரு முடிவிற்கு வருகின்றார். அஃதாவது உலகிடைப் புகழ் பெறுதலும் அதற்கு மறுதலையான இகழைப் பெறுதலும் அவரவர் வினைப்பயனேயாம் என்பதாம். ஆற்றிடைப்பட்ட புணை தன்வழிச் செல்லுமாற்றலின்றி ஆற்று நீர் செல்லும் வழியிலேகுதல் போல, உயிர்கள் தங்கள் விருப்பம்போல் புகழையும் இகழையும் அடைதல் இயலாதென்றும், வினைப்பயன் உள்ள வழியே அது இயலுமென்றும் கூறுவாராயினர். இம் மட்டோ? அருஞ்செயல்கள் செய்து தீருதலும் அவரவர் விருப்பம்போல் இயலுவதன்றென்றும் அதுவும் வினை வழி இயலுவதாகலின் அங்ஙனம் செயற்கருஞ் செயல் செய்தாரை வியத்தல் ஒருவகையிற் றவறுடையதே என்ற முடிபிற்கும் வருவாராயினர். ஆதலால்தான் 'பேர்யாற்று, நீர் வழிப்படூம் புணைபோல் ஆருயிர்'—

முறைவழிப் படூஉ மென்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின் மாட்சியிற்
பெரியோரை வியத்தலு மிலமே
சிறியோரை இகழ்தல் அதனினு மிலமே !

என்று ஆணித்தரமாக எடுத்தோதினர். இவ்வுண்மையை நன்கு மனத்திற் பதிப்பார்களாயின் உலகத்தார் வீணாக

ஒருவரைப் புகழ்தலினின்றும் தவிர்வார்களாதலாலும் அதன் பயனுகப் புகழ் கருதிப் போரிடும் நொய்மையாளர்கள் போரிடுவதினின்றும் நீங்குவரென்றும் அறிகிறோம்.

எனவே இதுகாறும் கூறியவற்ருன் சிறந்த புலவன் ஏனேயோர் காணுகின்றதைவிட அப்பாற் காணக்கூடியவனென்பதும், அவ்வாறு தான் கண்ட பேருண்மைகளேப் பிறர் காணுமாறு காட்டும் வன்மையுடையவனென்பதும் பெற்ரும்.

உலகில் வழங்கும் எம் மொழியாயினும் சரியே, அச் சிறந்த மொழியின் இலக்கிய உலகில் இவ்வளவு அரிய சிறப்புப் பொருந்திய பாடல் ஒன்றைக் காணுவது அருமையினும் அருமையே. அத்தகைய சிறப்புத் தமிழ் மொழிக்கே உண்டு. அதினும் அதன்கண் வழங்கும் தலேயாய இலக்கியங்களிற் சிறந்த புறநானூற்றுத் தொகுதியில், இப் பாடலிருப்பது முற்றிலும் சால்புடைத்தே.

மக்களினத்தின் அறியாமையைப் போக்கி அறிவு கொளுத்தல் முதலான தொழில்களேச் செய்யவேண்டுவதும் பாடல்களின் வேலேயே. மேலே நாட்டார் படிக்கும்போது உண்டாம் இன்பத்தையே குறிக்கோளாகக் கொண்டிருக்கும் பாடல்களே ஒரு பகுதியாகவும் ஒழுக்கம் கற்பிக்கும் பாடல்களே மற்ருெரு பகுதியாகவுங் கொண்டனர். பின்னேயதை 'Didactic Poetry' என்று கூறுவர். அத்தகைய வேறுபாடு தமிழ்ப் பாடல்களில் காணுவது இயலாத தொன்ரும். ஈண்டுக் காணப்படும் எல்லாப் பாடல்களும் இன்பமூட்டல், கற்பித்தல் என்ற இரு தொழில்களேயும் செய்வனவாகும்.

**இம்மைச் செய்தது மறுமைக் காமெனும்**
**அறவிலே வணிகன் ஆயலன் பிறரும்**

**சான்ஞேர் சென்ற நெறியென**
**ஆங்குப் பட்டன்(று) அவன்கை வண்மையே** (134)

என்ற பாடலின் பாடல் நயமெலாம் ஒருபுறமிருக்க மக்களிற் பெரும்பாலோர் செய்யுந் தவற்றைப் புலவர் எவ்வளவு அழகாகக் கண்டிக்கின்ருர் என்பது நோக்கற்பாலது. வண்மைத் தன்மையுடையார் மறுமைப் பயனுய கைம்மாற்றைக் கூட எதிர்பார்ப்பின் அது வண்மையாகாதென்ற பேருண்மையை எடுத்துவிளக்கும் அழகு நோக்கற்பாலது. இனி அரசனெருவனை நோக்கி, நால்வகைப் படையும் உடையராய்

**மண்கெழு தானை யொண்பூண் வேந்தர்**
**வெண்குடைச் செல்வம் வியத்தலோ விலமே**
**எம்மால் வியக்கப் படூஉ மோரே**
**சீறூர் மன்ன ராயினு மெம்வயிற்**
**பாடறிந் தொழுகும் பண்பி னேரே!** (197)

எனக் கூறுகின்ருர். உண்மைக் கவிஞன் கேவலம் வயிற்றுப் பிழைப்புக்குப் பாடுகின்றவ னலன் என்பது இதனுற்றெளியப்படுகின்றதன்ரு! இனிச் "செல்வத்துப் பயனே ஈதல், துய்ப்பே மெனினே தப்புந பலவே" என்றும் "ஈயென விரத்தல் இழிந்தன்று அதனெதிர் ஈயே னென்றல் அதனினு மிழிந்தன்று, கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன் றதனெதிர் கொள்ளே னென்றல் அதனினு முயர்ந்தன்று" என்றும் வரும் பாடல்கள் தமிழ் நாட்டிற்கு மட்டுமல்ல உலக முழுதுக்கும், எக்காலத்துக்கும், எவ்வகை நாகரிகமுடைய மக்கட் டொகுதிக்கும் பயன்படும் நீதிகளாம்.

இலக்கியத்தில் பெரிதும் விரும்பப்படுவது சுவைகள். அச் சுவைகள் தானும் எண்வகைப்படும். அவை யாவும் இப் பாடல் தொகுதியுள் யாண்டும் பரக்கக் காணலாம்.

விரிவஞ்சி ஒன்றிரண்டு காட்டிச் செல்கின்றும். நகையாகிய சுவை பயக்கும் பல பாடல்களுள் "நள்ளி வாழியோ... மாலை மருதம் பண்ணிக் காலைக்-கைவழி மருங்கிற் செவ்வழி பண்ணி—வரவெமர் மறந்தனர்—(149) என்ற மடமை காரணமாக நகை பிறந்த பாடலும் ஒன்று. அவலச் சுவையில் "பூத்தலையறு...பாரிமகளிர்"—(200) என வரும் பாடலும் "அளியதாமே சிறுவெள்ளாம்பல்...அல்லிப் படூஉம் புல்லாயினவே"—(248) என்ற பாடலும் இன்னும் 63 போன்ற பாடலும் காணத் தக்கன. இளிவரல் என்ற சுவைக்கு "தொடித்தலை விழுத்தண்டூன்றி—"(243) என்ற பாடலும், மருட்கை என்ற சுவைக்கு "நினைக்குங்காலை மருட்கையுடைத்தே"—(217) என்ற ஒப்பற்ற பாடலும் உதாரணங்களாம். அச்சமாகிய சுவை "களரி பரந்து... பகலுங் கூவுங் கூகையொடு, பிறழ்பல் ஈமவிளக்கிற் பேய் மகளிரொடு, அஞ்சுவந்தன்றிம் மஞ்சுபடு முதுகாடு" (356) என்பதுபோன்ற பாடல்களாலும்,பெருமிதம்என்ற உயர்ந்த சுவை "இரவலர் புரவலை நீயுமல்லை"—(162) என்பது போன்ற பாடல்களாலும் விளக்கப்படுகின்றன. இனி வெகுளி என்ற சுவை "வரிவயம் பொருத வயக்களிறு போல, இன்னுமாறாது சினனே"(100) என்பது போன்ற பாடல்க ளிடத்தும் இன்னும் 300, 278 என்ற எண்ணுள்ள பாடல்களிடத்தும் பாக்கக் காணலாம். உவகை என்ற சுவை "ஆதல் நின்னகத் தடக்கிச், சாதல் நீங்க எமக் கீத்தனையே...நீலமணிமிடற் றொருவன்போல, மன்னுக பெரும நீயே"—(91) என்பதுபோன்ற பாடல்க ளிடத்துக் கிடைக்கின்றது.

இத்தனைச் சுவைக்கும் நிலைக்களனுயுள்ள இப் பாடற்றொகுதியில் இலக்கிய அழகுகள் இன்னும் எத்தனையோ உள. ஓர் இலக்கியம் அக்கால மக்களின் வாழ்க்கையை,

வாழ்க்கையின் குறிக்கோளை, மக்கட்பண்பை, எடுத்துவிதக்கும் கண்ணாடியாயிருக்க வேண்டுமென்பது இலக்கிய ஆராய்ச்சியாளர் முடிபாம். அம்முறையில் கிறிஸ்து நாதர் தோன்றுதற்குப் பன்னூறாண்டுகட்கு முன்னர் வடவேங்கடம் தென் குமரியாயிடை வாழ்ந்த மக்களின் மனோநிலையை, அத் தமிழ் நாட்டில் பல்வேறிடங்களிற் றோன்றிய இப் புலவர் பெருமக்கள் நன்கு எடுத்துக்காட்டியுள்ளனர். அப் பலதிறப்பட்ட படங்களுள் இரண்டை ஈண்டு எடுத்து ஆராய்வோம். இவற்றுள் முதலாவது ஒருசார் சிறுபாலான மக்கள் தொகுதியின் மனோநிலை. அது உயர்ந்த நிலை என்பதைக் காட்டவரவில்லை. அதன் மறுதலையான தாழ்ந்த மனநிலை யுள்ளாரின் படமது. இன்னோர் பிறர் துன்பங்கண்டு அதனால் மகிழ்வும், அத் துன்பத்திற்கு ஒரு சிறிது தாங் காரணராயின் அதனால் பெருமிதமுங் கொள்வர். இதனைப் புலவன் ஏற்றுக் கொள்கிறான் எனக் கூறுதற்கில்லை. எனினும் தன் முன் காணும் மக்களுள் ஒரு கூட்டத்தாரின் பண்பைப் படம் பிடித்துக் காட்டவேண்டிச் செய்த செய்யுள் இது எனக் கூறலாம்.

கடுந்தேர் குழித்த ஞெள்ள லாங்கண்
வெள்வாய்க் கழுதைப் புல்லினம் பூட்டிப்
பாழ்செய் தனையவர் நனந்தலை நல்லெயில்
புள்ளின மிமிழும் புகழ்சால் விளைவயல்
வெள்ளுளைக் கலிமான் கவிகுளம் புகளத்
தேர் வழங்கினை (15)

என்ற இப் பாடலால் மக்கட் பண்பின் இழிந்தோர் செய்கை வெளியாகின்றது. இவ்வகை மக்கள் அன்றும் இன்றும் என்றும் உள்ளனர். இத்தகையோர் இருப்பத

ஞலேயே சான்ேருர் பெருமை தெற்றென விளங்குகிறது. "எம்மம்பு கடிவிடுதும் நம்மரண் சேர்மின்" எனக் கூறும் சீரிய மரபும் நன்கு விளங்குகிறது.

இனிப் பெரிதும் மேம்பட்ட மக்கட் கூட்டத்தாரின் மனப் பண்பை வெளியிடும் பாட்டு ஒன்றை நோக்குவோம். மனப்பண்பு சிறக்கச் சிறக்க உயிர்த் தொகுதியின் விரிவும், அவ்விரிவில் காணப்படும் ஒற்றுமையும் நன்கு விளங்கும். கேவலம் விலங்கினங்களும், தம்மை ஒத்த உயிரும் இயல்பும் உடையன என நினைக்கும் ஒப்பற்ற மனே நிலையை இப் பாடலால் அறிகின்ேறும். அதுவும் எழுத்து வாசனை அறியாத ஒரு வேடுவப் பெண் மனத்துட்டோன்றும் கற்பனைக் காவியத்தை ஈண்டுக் காண்கின்ேறும். இப் பாடலின் கருத்து மிகவும் எளிமையானதே. ஒரு வேட்டுவப் பெண் குடிசை வாயிலில் தினை உலர்த்தியுள்ளாள். அதனண்மையில் ஒரு கலைமான் பெடையோடு விளையாடுகிறது. அவளது கணவனும் அதனருகே வேட்டையாடிய களையால் மெய்மறந்து உறங்குகின்ருன. இந்நிலையில் தினையைக் கோழி தின்கின்றது. இத்தினையைத் தவிர (இரவுக்கு) வேறு ஆகாரம் இல்லை. இச் சமயத்தில் கோழியை ஓட்டவேண்டும். ஆனுல் அவள் அதனைச் செய்யவில்லை. அதன் காரணத்தை ஆசிரியர் மொழியாலேயே காணுவோமாக.

**கைம்மான் வேட்டுவன் கனைதுயின் மடிந்தெனப்**
**பார்வை மடப்பிணை தழீஇப் பிறிதோர்**
**தீர்தொழிற் றனிக்கலை திளைத்து விளையாட**
**இன்புறு புணர்நிலை கண்ட மனையோள்**
**கணவ னெழுதலு மஞ்சிக் கலையே**
**பிணைவயிற் றீர்தலு மஞ்சி யாவதும்**
**இல்வழங் காமையிற் கல்லென வொலித்து**

காவலானவன் என்று இன்னோரன்ன புகழ்மொழிகளைக் கவிஞர்கள் சிவபெருமானுக்குச் சூட்டியிருக்கின்றார்கள்.

### திருமால்

இனித் திருமாலின் உருவத்தைப் பார்ப்போம். நீல மணியை ஒத்த திருமேனியை யுடையான். அஞ்சனமேனியன் என்றும் புகழ்ந்து கூறுவர். கருடப்புட் கொடியை உயர்த்தியவன். புகழிற்கும் செல்வத்திற்கும் திருமாலையே புலவர்கள் ஒப்பிடுகின்றனர். சக்கரப்படைகொண்டு நேமியான் என்னும் பெயர்பெற்றான். பஞ்சாயுதங்களைப் படைத்திருப்பவன் என்பது 'தாலி களைந்தன்றுமிலன்' (77) என்ற தொடரிலிருந்து நாம் ஊகிக்க இடந் தருகின்றது; தாலி என்பதற்கு ஐம்படைத்தாலி என்று ஆன்றோர் பொருள் கூறலின். ஒருங்கிருந்த இருவேந்தரை

பானிற வுருவிற் பனைக்கொடி யோனும்
நீனிற வுருவி னேமி யோனுமென்று
இருபெருந் தெய்வ முடனின் றாஅங்கு
உருகெழு தோற்றமோ டுட்குவர விளங்கி (58)

என்று புகழ்கின்றார் காவிரிப்பூம் பட்டினத்துக் காரிக் கண்ணனார். இங்குப் பலதேவரோடு நேமியான் என்று குறித்தது கண்ணனைக் குறித்ததாதல் வேண்டும்.

### பலதேவர்

கண்ணன் உடன் பிறந்தவரான பலதேவர் கடற் சங்கு போன்ற நிறமுடையவர். அதனால் வாலியோன் என்ற பெயரடைந்தார். இவருக்கும் கோயில் கட்டி வணங்கினர் என்பது சிலப்பதிகாரத்தால் தெளிவாகத் தெரிகிறது. ஆனால் பிற்காலத்தில் இவர்தம் கோயில்கள் காண

மற் போயின. இவர் பனைக்கொடி யுடையார்; நாஞ்சிற்படை யுடையார். வலிமையிற் சிறந்தவர். 'வலியொத்தீயே வாலி யோனை' (56) என்று புகழ்ந்தார் ஒரு புலவர்.

### பிரமன்

பலதேவருடைய கோயில் இல்லாமை போலவே பிரம தேவன் கோயிலும் இக்காலத்தில்லை. பிரமதேவன் படைப் புக் கடவுள் என்று சொல்லவேண்டியதில்லை. அவன் படைப் பில் எத்தனையோ விசித்திரங்கள். எத்தனையோ இன்பங் கள்; அதனோடு எத்தனையோ துன்பங்கள் கலந்திருக்கின் றன. இன்பத்துடன் துன்பத்தையும் உடன்படுத்து உலகத் தில் இன்னுமையை மிகுவிப்பதைக் கண்ட ஒரு புலவர் 'படைத்தோன் மன்றவப் பண்பிலாளன்' (194) என்று பிரமனுக்கு ஒரு பழி சூட்டுகிறார்.

### முருகன்

பழந்தமிழ் நூல்களில் பல இடங்களில் புகழப்படும் தெய்வங்களுள் முருகனை முக்கியமாகக் கூறவேண்டும். மயில் ஊர்தியில் மயிற் கொடி ஏந்தி இலங்குகின்றான். கார்காலத்துப் பூக்கும் கடப்பமாலையை அணிந்திருக்கின் றான். சூரனை வென்ற வீரன்; எண்ணியதை முடிக்கும் ஆற்றலான். அரசர்களின் வீரத்திற்குப் பல புலவர்களும் முருகனை ஒப்பிடுகின்றார்கள். இவன் கோயில் கொண்டிலங் கும் பதிகளிலொன்றாகிய செந்திலம்பதி சிறப்பித்துக் கூறப்படுகிறது (55). முருகன் பொருட்டு வெறியாடல், முருகன் மக்கள்மேல் ஆவேச மாதல் முதலியனவும் குறிக் கப்பட்டிருக்கின்றன.

### இந்திரன்

இந்திரன் 'வச்சிரத்தடக்கை நெடியோன்' (241) என்று புகழப்பட்டிருக்கின்றான். பலதேவன், இந்திரன்,

பிரமன் முதலியோர் கோயில்கள் இன்று நாம் காணக்கூட வில்லை. சங்க காலத்திற்குப்பிற்பட்ட சிலப்பதிகாரத்தில் இவர் கோயில்களைக் காண்கிறோம். முக்கியமாக, சிவன், திருமால், முருகன் இவரைப்பற்றிய செய்திகள் தாம் சங்க நூல்களில் விரிவாகக் காணக்கிடக்கின்றன.

## தேவி

தேவியின் முற்றம் புறம் 247-ல் சிறப்பிக்கப்படு கிறது. காய்ந்த விறகுகளை யானைகள் கொண்டுவந்து வேடு வர்களுக்குக் கொடுக்கின்றன. அதனைப்பெற்று அவர்கள் அதனால் தீ மூட்டினர். அவ்விளக்கொளியில் மடப்பம் பொருந்திய மான்கள் தூங்குகின்றன. மந்திகள் அம்முன் றிலைச் சீத்துச் சுத்தம் செய்கின்றன. இத்தகைய காட்சி யுடன் கூடியது தேவியின் முன்றில் என்கிறார். தேவி வணக்கம் சிலப்பதிகாரத்தில் ஒரு பகுதியையே மேற் கொண்டுவிட்டது. வேட்டுவவரி முழுவதும் தேவியின் புகழ்தான் பேசப்பட்டிருக்கின்றது. தேவியின் முன்றிற் சிறப்பை மிக அழகாக இளங் கோவடிகள் அங்கே கூறி யிருக்கின்றார்.

தெய்வங்களின் பெயர்களை மக்களுக்கு இடும் வழக்க மும் அக்காலத்தே தொடங்கிவிட்டது. கருவூர்ப் பெருஞ் சதுக்கத்துப் பூத நாதனார், சோழன் நல்லுருத்திரன், நல் லிறையனார், மதுரைத் தமிழக் கூத்தனார், மதுரைப்போால வாயர், உறையூர் மருத்துவன் தாமோதரனார், தாமப்பல் கண்ணனார், பிரமனார், பெரும்பதுமனார், ஒக்கூர் மாசாத்தி யார், சீத்தலைச் சாத்தனார், பாண்டியன் கீரஞ்சாத்தன் முத லியன அப்பெயர்களில் சில. சாத்தனார் என்ற பெயர் வழக் கால் ஐயனார் எனப்படும் சாத்தனார் வணக்கமும் இருந்தது என்று எண்ண இடமுண்டு.

## சிறு தெய்வங்கள்

சிறு தெய்வ வழிபாடும் அக்காலத்திருந்தது. மலையிலும், நீரிலும், மரங்களிலும் தெய்வம் உறைவதாக மக்கள் நம்பி வந்தனர். மலையைச் சிறப்பிக்குமிடத்து அணங்குடை நெடுங்கோடு, அணங்குசால் அடுக்கம், அருந்திறற் கடவுள் காக்கும் உயர்சிமையம் என்றிவ்வாறு அது கூறப்பட்டிருக்கின்றது. தெய்வம் உறைந்த ஓர் ஆலமரத்திற்கு கடவுள் ஆலம் (199) என்று ஒரு புலவர் பெயர் சூட்டுகின்றார். புறம் 260-ல் கள்ளிநிழலில் உள்ள ஓர் தெய்வத்தைப் பாணன் தொழுது வருவதாக அவனைச் சிறப்பிக்கின்றார். கள்ளிநிழல் முதலியவற்றில் உள்ள தெய்வங்கள் என்றது நடுகல்லைக் குறித்ததாக இருக்கலாம்.

சிறந்த வீரனுக்குக் கல்நட்டுச் சிறப்புச் செய்யும் ஒரு பெரு வழக்கு புறத்தில் மிகுதியும் பயின்றுள்ளது. நடுகற் பற்றி,

காட்சி கால்கோள் நீர்ப்படை நடுகல்
சீர்த்தகு மரபிற் பெரும்படை வாழ்த்தல்

(தொல். புறத். 5)

என ஆறு செய்திகள் உரைத்தார் தொல்காப்பியர். இச் செய்திகள் அனைத்தும் இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. சாதாரணமாகப் போரிற் சென்று இறந்தவர்களுக்கெல்லாம் கல்நட்டனர் என்று சொல்லமுடியாது. கல்நாட்டுதற்குரிய வீரனுடைய வீரமே ஒரு தனியான வீரம். பெரும் போரிலே தன்னுடன் நின்று பொருதவர்கள் போய்விடுகின்றனர். அப்பொழுது, தான் ஒருவனாய் நின்று அஞ்சாது பொருது உயிர்துறக்கின்றான். இத் தகையோருக்கே கல்நட்டனர்.

கல்லா இளையர் நீங்க நீங்கான்
வில்லுமிழ் கடுங்கணை மூழ்கக்
கொல்புனற் சிறையின் விலங்கியோன் கல்லே (263)

என்ற அடிகள் நடுகற்குரிய வீரன் சிறப்பை விளக்கிக் காட்டுகின்றன. கல்லில் மயிற்பீலி சூட்டிக் கள்ளினைப் படைத்து வாழ்த்துவர். கல்லிற்குச் சிறு பந்தரும் இட்டிருப்பர். வேங்கைப்பூ முதலிய பூக்களும் கல்லிற்கு அணிதல் உண்டு. நடுகல்லையும் தெய்வமாகவே வழிபட்டனர். ஓர் இரவலனை, நடுகல்லைத் தொழுது செல், இவ்வழி மழை பொழியும். அதனால் நாடு செழித்து மேம்படும் என்று சொல்லியனுப்புகிறார் ஒரு புலவர் (263).

நீர்த்தெய்வம் பற்றிய குறிப்பும் புறத்தில் பயின்றுள்ளது. முந்நீர் விழவின் நெடியோன் (9) என்ற அடியின் உரையில் உரையாசிரியர் கடல் தெய்வத்திற்குச் செய்த விழவு என்று உரை வகுப்பர். சிலப்பதிகாரத்திலே கடற்றெய்வம் பற்றிய குறிப்புச் சில விடங்களில் காணப்படுகின்றமையின் இவ்வடியில் கடல் தெய்வம் குறிக்கப்பட்டது என்பது தெளிவாகின்றது.

சிறு தெய்வங்களிலே பேய் ஒரு பெருங் கூட்டம். இவை இறந்த வீரர் புண்ணைக் குடைந்து அவர்களுக்கு ஊறுவிளைக்கும். பேய் அணுகாமல் காப்பதற்கும் மக்கள் சில சடங்குகளைக் கையாண்டனர். இரவு, வேம்பு இம் மரங்களின் தழையை வீட்டின் இறப்பில் செருகிவைத்தல், யாழ் முதலிய இன்னிசைக் கருவிகளால் இசை பாடல், மையிடல், வெண்சிறுகடுகு சிதறுதல், மணி அடித்தல், காஞ்சிப்பண் பாடல் முதலியன அவர் பேய் வாராமற் காத்தற்குச் செய்த சில முறைகள். பூதங்களும் போர்க்களத்தில் இறந்த வீரர்களைத் துன்புறுத்தும் என்று மற்றோ

ரிடத்தில் காணப்படுகிறது. பூதங்களைக் கூளிச் சுற்றம் என்றும் சொல்வதுண்டு.

பதினெண் கணத்தேவர்கள், பிதிரர், யமன், ஞாயிறு, திங்கள், விண்மீன் முதலியனவும் சிறு தெய்வ வகையுள் அடங்கும். இவற்றைப் பற்றிப் பல இடங்களில் ஆங்காங்கே பல புலவர்கள் விரித்துரைத்துள்ளார்கள்.

## வழிபாடு

மழை வேண்டிக் குறவர் தெய்வத்தை வழிபட்டமை ஓரிடத்துக் குறிக்கப்பட்டிருக்கிறது. மலையில் மழை பெய்யக் கடவுளை வேண்டினார்கள். விடாது மழை பெய்தது. பின் மழை மாறி மேகம் மேலே போகவேண்டும் என்று வேண்டுகிறார்கள் குறவர்கள். கடவுட்கு உயர்ந்த பலியைத் தூவி வணங்கினர். நெல், பூ முதலியவற்றைச் சொரிந்து வழிபடுதல் உண்டு என்று தெரிகின்றது. 'நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும்' (335) என்ற தொடரிலிருந்து நாம் இதனை ஊகிக்கலாம். நடுகல் முதலிய சிறு தெய்வங்களுக்குக் கள் முதலியன வைத்து வழிபடும் முறை முன்னமே குறிக்கப்பட்டது.

## விழா

தெய்வத்தின் பொருட்டுச் சிறப்பான திருவிழாக்களும் செய்தனர். விழவு என்பதனைச் சாறு என்றும் வழங்கினர். அரசர்கள் வீரர்களுக்குப் பெருஞ்சோறு அளித்தல்; தாம் பிறந்த நாளைக் கொண்டாடுதல் என்ற இவற்றையும் பெருவிழாப் போலவே கொண்டாடினார்கள். சோலைகளிலே சென்று மக்கள் குதூகலமாய்ச் சிறு சோறு சமைத்து உண்டு மகிழ்ந்து ஆடுவர். இது சிறு சோற்று விழவு எனக் குறிக்கப்படுகிறது. தெய்வத்திற்கு அடிக்கடி

எப்பொழுதும் விழா நடக்கும். மக்கள் யாவரும் அக் காலத்து மகிழ்ச்சியுடன் சென்று காண்பர். விழவில் பல மக்கட்கு உணவு அளிப்பர். 'விழவின்றாயினும் படுபதம் பிழையாது' (96) என்ற அடி இதற்குச் சான்று. 'சென்மோ பெரும எம் விழவுடை நாட்டென' (381) 'விழவும், அகலுளாங்கண் சீறூர் மறப்ப' (65) என்ற தொடர்கள் நமக்கு ஊர்களிலே மக்கள் செய்துவந்த விழவினைக் குறிக்கின்றன. புறம் 9-ல் முந்நீர் விழவு என ஒன்று மேலே குறிக்கப்பட்டது. இதற்கு உரைகாரர், கடல் தெய்வத்திற்குச் செய்த திருவிழாவைக் குறித்தது என்பர். கடல் தெய்வம், மலைத் தெய்வம், நடுகல் தெய்வம் முதலிய சிறு தெய்வங்களுக்கும் விழவு எடுத்தனர். அரசர்கள், தங்கள் பிறந்த நாளினையும், வெற்றியையுமே விழாவாகக் கொண்டாடினர் என்று தெரிவதால், சிவபெருமான் முதலிய தெய்வங்களுக்கும் விழவு செய்து வந்திருக்கவேண்டும். அகநானூற்றில் உறையூர் முதலிய சில நகரங்களில் நடந்த விழாக்கள் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. மற்றைய சங்க நூல்களையும் இங்குக் கூறியவற்றோடு ஒப்பிட்டு நோக்கின் அக்கால மக்கள் தெய்வங்களுக்கு எடுத்த விழாவினைச் சிறப்பாக உணரலாம்.

## கதைகள்

**ப**க்தி நெறியை மக்களுக்கு ஊட்டுவன தெய்வங்களைப் பற்றிய கதைகள். கதைகள் மூலம் எத்தனையோ விஷயங்களை எளிதில் விளக்கலாம். புறநானூற்றுக் காலத்திற்கு முன் தமிழ் நாட்டில் வழங்கிய கதைகள் பல. அவற்றுள், பாரத இராமாயணக் கதை இரண்டும் மிகப் பழங் கதை. பாரதம் பாடிய பெருந்தேவனார் என்ற ஒரு புலவர் புறத்தில் குறிக்கப்படுகின்றார். இவர் முற்காலத்தில் தமிழில்

பாரதம் செய்த சிறப்பால் இச் சிறப்புப் பெயர் இவருக்குக் கிடைத்தது. சேரமான் பெருஞ்சோற்று உதியஞ்சேரலாதன் என்ற சேர மன்னன் பாரதப் போரில் இருதிறத்தார் படைக்கும் பெருஞ்சோறு வழங்கினன் என்பது ஒரு வரலாறு. அக்காரணத்தால் அச் செயல் அவனுக்கு விருதாயிற்று. 366–ம் செய்யுள் தருமபுத்திரனைக் கோதமனர் பாடியது என்று காணப்படுகின்றது. தருமபுத்திரனை 'அறவோன் மகனே' என்று குறிப்பிடுகின்றார். இது பாரதத்தில் வரும் பெயரை நினைவூட்டுகிறது.

இராமாயணக் கதை ஒரு பாட்டில்தான் குறிக்கப்படுகிறது. இப் பாட்டில் குறிப்பிட்ட செய்தி இராமாயண நூல்களில் இல்லாத ஒரு புதுச் செய்தி. கிஷ்கிந்தையிலே சீதாதேவியின் அணியைக்குரங்குகள் அணிந்தசெய்தியைக் கூறுகின்றார். இச்செய்தி தவிர வேறொன்றும் இந்நூலில் இல்லை. ஆயினும் கதை முழுவதும் அவருக்குத் தெரியாது என்று சொல்லுவதற்கு இல்லை. பாரதம், இராமாயணம் இரண்டும் சங்க காலத்திலிருந்தே மிகுதியாகப் போற்றப்பட்ட கதைகள் என்பது தெளிவு.

திருமால் செய்த திருவிளையாடல்களிலே மற்ற நூல்களில் காணப்பெருத செய்தி ஒன்று இந்நூலில் உளது. அசுரர்கள் சூரியனை எடுத்து மறைத்துவிடுகின்றார்கள். உலகம் இருண்டுவிடுகிறது. அஞ்சன உருவனை திருமால் சூரியனைத் திரும்பக் கொணர்ந்து உலகத் துன்பம் தீர்த்தான் என்பது இங்குக் குறித்த வரலாறு. திருமால் ஆலிலையில் பொருந்திய வரலாறு புறம் 198-ல் காணப்படுகிறது. சிவபெருமான் திரிபுரம் எரித்த வரலாறும் விளக்கமாகவே ஒரு பாட்டில் கூறியிருக்கிறார். ஓங்கிய பெருமலையிலே பாம்புநாணைக் கொளுவி ஒரு கணையால் மூன்று மதிலையும் அழித்து அமரர்க்கு வென்றி தந்தார்

என்று திரிபுரம் எரித்த வரலாறு கூறப்படுகிறது. சிவபெருமான் திருமால் முதலியோரைப் பற்றிப் பல கதைகள் அக்காலத்தில் வழங்கியிருக்கவேண்டும். அக் கடவுளரை வருணிக்கும் வருணனைத் தொடரிலிருந்தும் நாம் சில கதைகளை ஊகிக்கலாம். முருகன் சூரனை வென்ற செய்தியும் கூறப்பட்டுள்ளது. இவ்வாறுகப் பல கதைகள் பக்திநெறிக்கு ஏதுவாய் அக்காலத்துவழங்கின. இவற்றையெல்லாம் அடிப்படையாகக் கொண்டுதான் பிற்காலத்தில் புராணக் கதைகளிலே தெய்வத் திருவிளையாடல்களைக் கூறிப் பக்தியைப் பெருக்கினர். பிற்காலத்தில் விரிவாகக் காணப்பெறும் பல செய்திகளுக்கு மூலம் சங்க நூல்களில் காணலாம்.

## புத்தம்—சமணம்

இதுவரையில் வேத நெறிப்பட்ட வேள்வியும், சிவபெருமான் முதலிய தெய்வ வழிபாடும் சிறுதெய்வக்கொண்டாட்டமும், அத் தெய்வங்களைப்பற்றிய கதைகளையும் பார்த்தோம். இனி அக் காலத்தில் மிகப் பயின்ற புத்தம், சமணம் ஆகிய இரண்டு சமயங்களைப் பற்றிய குறிப்புக்களை ஆராய்வோம். புத்தம், சமணம் பற்றி வெளிப்படையாக ஒன்றுமில்லை.

> **முதுமுதல்வன் வாய்போகாது**
> **ஒன்றுபுரிந்த ஈரிரண்டின்**
> **ஆறுணர்ந்த வொருமுதுநூல்**
> **இகல்கண்டோர் மிகல்சாய்மார்** (166)

என்ற அடிகள் புறம் **166**-ல் உள்ளன. இவற்றில் இகல் கண்டோர் மிகல் சாய்மார் என்பதற்கு 'வேதத்திற்கு மாறுபட்ட நூல்களைக் கண்டோராகிய புத்தர் முதலிய புறச் சமயத்தோர் மிகுதியைச் சாய்க்கவேண்டி' என்று உரை வகுக்கப்பட்டிருக்கின்றது. உயிர்க்கொலை செய்துவேட்கும் வேள்வியை மறுத்து ஜீவகாருணியத்தை நிலைநாட்டியவர்

புத்தரும் சமணருமேயாவர். இவர்களுடைய பெருக்கமும், வேள்வி செய்து வழிபடுவோருக்கும் இவருக்கும் இருந்த பகைமையும் இங்குப் புலனுகிறது. புறப்பாட்டுப் பாடியவருள் உலோச்சனர் என்பவரும் ஒருவர். உலோச்சு என்பது சைனர்கள் செய்துகொள்ளும் ஒரு கிரியை என்றும், அதனுல் இவர் சைனரென்று கொள்ளுதற்கு இடமுண்டு என்றும் புறநானூற்றில் பாடினேர் வரலாறு (புறநா. 3-ம் பதிப்பு, பக் 7) கூறுமிடத்து உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் குறித்துள்ளார்கள். கொல்லாமை, நிலையாமை, துறவு முதலியனவற்றை மிகவும் வற்புறுத்தும் மதம் சமண பௌத்த மதங்களே. இவற்றைப் பல இடங்களில் புலவர்கள் வற்புறுத்தியிருக்கின்றூர்கள்.

நிலையாமை

நிலையாமையை உணரும் உணர்ச்சியே துறவு, அறநெறி என்றிவற்றை உண்டாக்கவல்லது. திருநாவுக்கரசர் நிலையாமையை உணர்ந்ததனுல் உடனே துறவும் அறநெறியும் உண்டாயிற்று என்று சரிதம் கூறுகிறது. 'நில்லாத உலகியல்பு கண்டு நிலையா வாழ்க்கை யல்லேனென் றறத் துறந்து' (நாவுக்-37) 'தேசநெறி நிலையாமை கண்டறங்கள் செய்வாராய்' (நாவுக்-35) என்று பெரிய புராண ஆசிரியர் குறிப்பிடுகின்றூர். உலகம் செல்வம் முதலியன மன்னுதன. ஆடும் கூத்தர்போல் தோன்றி மறைவன. உலகம் ஒரு பகுதி இன்பமும் ஒரு பகுதி துன்பமும் கலந்தது. சுடுகாட்டைப் பார்த்ததும் ஒரு புலவருக்கு நிலையாமை உணர்ச்சி பிறக்கிறது. ஆகா, இந்தக் காடு உயிர்த்தொகுதிகள் எல்லாவற்றையும் ஏற்றுத் தான்மாத்திரம் அழிவின்றி எவ்வாறு மக்களுக்கு நிலையாமையை உணர்த்துகிறது என்று எண்ணுகிறுர். அவ்வெண்ணம்,

எல்லார் புறனுந் தான்கண் டுலகத்து
மன்பதைக் கெல்லாந் தானாய்த்
தன்புறங் காண்போர்க் காண்பறி யாதே. (356)

என்ற பாட்டு வடிவில் வெளிவருகிறது. மற்றொரு புலவர் சந்திரன் கல்வியறிவற்ற மடவோர்களுக்குக்கூட நிலையாமை முதலிய செய்திகளைப் பிரத்தியட்சமாகக் காட்டி அறிவுறுத்துகின்றது என்கிறார்:

தேய்த லுண்மையும் பெருக லுண்மையும்
மாய்த லுண்மையும் பிறத்த லுண்மையும்
அறியா தோரையும் அறியக் காட்டித்
திங்கட் புத்தேள் திரிதரும் உலகம் (27)

என்பது அவர் வாக்கு.

துறவு

நிலையாமை கண்டார்க்குத் துறவு எண்ணம் தோன்றுகின்றது. இத்தகைய எண்ணம் இளமையிலேயே தோன்றிற்று என்று எண்ண இடம் இல்லை. உலக வாழ்வைப் பற்றி நின்றவர்களுக்கே அதன் துன்பமும் நிலையாமையும் நன்கு தெரியும். தொடித்தலை விழுத்தண்டினார் என்ற புலவர் தம் இளமை நினைந்து இரங்குகின்றார். இது அவர்தம் வாழ்க்கையைப் புனிதப்படுத்தும் எண்ணம். புறம் 251, 252-ம் செய்யுட்கள் தவம் செய்யும் ஒருவர் தன்மையைக் கூறுகின்றன. தவம் செய்வோன் இளமையில் இருந்த நிலைமையும் அப் புலவர் குறிப்பிடுகின்றார். அப் பாடலில்

பாவை யன்ன குறுந்தொடி மகளிர்
இழைநிலை நெகிழ்த்த மள்ளன். (251)

இல்வழங்கு மடமயில் பிணிக்கும்
சொல்வலை வேட்டுவன். (252)

என்று புலவர் அவனது இளமைப் பருவத்தை நமக்குக் காட்டுகின்றார். இவ்வாறு மங்கையருடன் வாழ்ந்து நில்

லாத உலகியல்பு கண்டு துறவெண்ணம் தோன்றுகின்றது. அவ்வெண்ணத்திற்குத் தடையாயிருப்பது சுற்றம்.

ஓடி யுய்தலுங் கூடுமன்
ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே (193)

என்கிறார் ஓரேருழவர் என்ற புலவர். இத்தடையை நீக்கித் துறந்தவர்கள் மூங்கில் வளர்ந்த மலைச்சாரலிலே சென்று அருவிநீரிலே ஆடுகின்றனர். இத்தகைய தவசிகளுக்கு யானைகள் விறகு கொண்டுவந்து கொடுக்கின்றன. அதனால் தீ வேட்டுப் புரிந்த சடையைப் புலர்த்தித் துறவிகள் வாழ்கின்றார்கள் என்று தெரிகிறது. இச் செய்யுட்களில் கூறப்பட்ட துறவு தொல்காப்பியர் கூறிய துறவு நெறியை ஒத்திருக்கிறது. குழவியிடத்தே துறக்க என்பது பிற்காலத்து ஏற்பட்ட கொள்கை போலும்.

## சான்றோர்

மெய்யுணர்வு பெற்ற பெரியார் மக்கட்கு நல்லறிவு புகட்டினர். இப்பெரியார் குற்றமற்ற நூற்கேள்வியையுடையவர். அறங்கோடா நாப் படைத்தவர். கல்வி, நற்குணம் இவற்றால் நிறைந்து எல்லோரிடத்தும் பணிவுடையராய் ஐம்புலனும் அடங்கிய கோட்பாட்டினையுடையவர் என்று ஓரிடத்துச் சான்றோரிலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. இதனை ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றோர் (191) என்ற வரிகள் நமக்கு விளக்குகின்றன. சான்றோர் சான்றோர்களை நாடியிருப்பர். இவர்கள் பொருந்தியிருக்கும் நிலமே நல்ல நிலம் என்று ஒளவையார் கருதுகின்றார். இவர்கள் மக்களுக்கு அறநெறியைப் போதித்து நல்வழியிற் செலுத்துபவர்.

அறத்தாறு

அறத்தாற்றை மக்களுக்கு இவர் பலதிறத்தில் விளக்கினர். உலகம் செல்வம் இவற்றின் நிலையாமையைக் காட்டியும் அறிவுறுத்துகின்றனர். செல்வத்துப் பயன் ஈதல்(189) என்றும் உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர் (18) என்றும் பரோபகாரத்தைப்பற்றிப் பலவாறு கூறியுள்ளார்கள். உயர்ந்த எண்ணங்களிலே மனத்தை நிலைக்கச் செய்து உண்மை நெறியிலே நடக்க வேண்டும் என்பது இவர்கள் நோக்கம். இப்பெரியோர்களின் உபதேசம் திறவோர் காட்சி (192) என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

நன்மை தீமை இவற்றிற்கு ஏற்ற பலனுண்டு. இதனை அறியாதவரோடு கூடலேதீது என்பது பெரியார் எண்ணம்.

நல்லதன் நலனும் தீயதன் தீமையும்
இல்லை யென்போர்க் கினனா கிலியர் (29)

என்கிறார் ஒரு புலவர். நல்வினைதான் துன்பக்காலத்தில் துணையாவது. இதனால் நல்வினையை 'அறத்துறை யம்பி' (381) என்றனர் நன்னாகனார். ஔவையார்,

வாழச் செய்த நல்வினை யல்ல
தாழுங் காலைப் புணைபிறி தில்லை (367)

என்று அறிவுறுத்துகின்றார். நல்வினை செய்வோர் மேலுலகத்து இன்பமுறுவர்:

ஈண்டுச்செய் நல்வினை ஆண்டுச் சென்றுணீஇயர்
உயர்ந்தோர் உலகத்துப் பெயர்ந்தனன் (174)

என்பது மாறோக்கத்து நப்பசலையார் வாக்கு. புலவர் பாடும் புகழ் படைத்தவர் மேலுலகத்துச் சிறந்த நன்மை எய்துவர் என்று போதித்தனர்.

*புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்*
*வலவ னேவா வானவூர்தி எய்துப* (27)

என்பது உறையூர் முதுகண்ணன் சாத்தனாரின் போதனை. அருளையும் அன்பையும் துறந்து பாவம் செய்தவர் நரகம் புகுவர் என்று 5-ம் பாடலில்

*அருளும் அன்பும் நீக்கி நீங்கா*
*நிரயங் கொள்பவர்* (5)

என்ற தொடரில் குறிக்கப்பட்டிருக்கின்றது. மேற்கூறியவற்றிலிருந்து சுவர்க்க நரகங்களைப்பற்றிய எண்ணங்களும் மக்களிடையே நன்கு பதிந்திருந்தன என்று தெரிகிறது.

*நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்*
*முறைவழிப் படூஉம்* (192)

என்பது ஒரு புலவர் வாக்கு.

வினையையும் ஊழையும் காட்டி வற்புறுத்தியது போலவே பல இடங்களில் கூற்றுவன் உண்மையைத் தெரிவித்தும் அறத்தை உபதேசிக்கின்றனர். அரசர்கள் நெறிதவறிச் செல்லுமிடத்துப்புலவர் இடித்துரைத்து அறவழிப் படுத்தினர். சான்றோர்கள் நோக்கமெல்லாம் மக்களைத் தீவழி நீக்கி நல்வழிப்படுத்துதலிலேயே பதிந்திருந்தது. பலர் நல்லது செய்தலை வற்புறுத்த, ஒரு புலவர், 'நல்லது செய்யவேண்டாம். அல்லது செய்தலைமட்டும் ஒழித்தால் போதும்' என்கிறார்.

*நல்லது செய்த லாற்றீ ராயினும்*
*அல்லது செய்த லோம்புமின்* (195)

என்பது அவர்தம் வாக்கு. ஒவ்வொருவரும் அறம் செய்ய இயலாவிடினும் இவர் கூறுவது போன்று அல்லவை செய்தலை ஒழிப்பின் உலகம் எவ்வளவு நன்றாயிருக்கும். இச் செய்கை ஒருவனை நல்வழிச் செலுத்துவது, மக்கள் எல்லோரும் உவப்பது என்பது அவர்தம் எண்ணம்.

## சமரச வுணர்ச்சி

உலகில் பகைமை இன்றி எல்லோரும் ஒற்றுமையாய் இன்பவாழ்க்கை நடத்தவேண்டும். ஒற்றுமை உண்டாக வேண்டுமாயின் பகைமை ஒழியவேண்டும்; அன்பு வளர வேண்டும். மெய்யுணர்வு வேண்டும். மக்களுக்குள்ளே வேற்றுமை எல்லாம் தொழிலால்தான்; பிறப்பால் அல்ல.

**பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமையான்** (குறள்-972)

என்று வள்ளுவர் பறை சாற்றுகின்றார். நக்கீரரும் புறத்திலே, எத்தகையோருக்கும்

**உண்பது நாழி உடுப்பவை யிரண்டே**
**பிறவும் எல்லாம் ஓரொக் கும்மே**
**செல்வத்துப் பயனே ஈதல்**
**துய்ப்பே மெனினே தப்புந பலவே** (189)

என்றறிவித்திருக்கின்றார். இம்மாதிரியான உணர்வு வந்தால் தான் ஒற்றுமை உண்டாகும். சமரச வுணர்ச்சி ஏற்படும். சமரச வுணர்ச்சியைப் புலவர்கள் நன்கு விளக்கி யிருக்கிறார்கள். இவ்வுணர்ச்சி ஏற்படின் 'யாதும் ஊரே யாவருங் கேளிர்' (192) என்றெடுத்துச் சமரச வுணர்ச்சியைப் போதித்த கணியன் பூங்குன்றன் வாக்குக்கு இலக்கியமாவர். உண்மையை, காய்தல் உவத்தல் இன்றி நோக்கும் பொது நோக்கே உணர்த்தவல்லது. மொழி விஷயத்திலும் உண்மை காண நமக்குப் பொது நோக்கு ஏற்பட வேண்டும். சமரச வுணர்ச்சியை இக் காலத்தில் அனுபவம் முதிர்ந்த பல பெரியார்கள் வற்புறுத்தி வருகின்றனர். ஒவ்வொருவரும் உண்மை காண வேண்டும் என்ற நோக்கத்துடன் ஒற்றுமையாக உழைத்தால் தமிழ்த்தாய் எவ்வளவு சிறப்புடன் இலங்குவாள்!

அத்தகைய ஓர் காலத்தை நாம் அனைவரும் காண விழைவோமாக.

சமயத்தின் குறிக்கோள் இச்சமரச வுணர்ச்சியன்றி வேறு யாது?

---

## ௯. தமிழர் பண்பாடு

பழங்காலத் தமிழருடைய நாகரிகத்தைக் குறித்துப் புறநானூறு என்ன கூறுகிறது என்பதை இங்கு ஆராயலாம். நாகரிகம் என்ற சொல்லானது, நகரத்தோடொட்டிய பழக்க வழக்கங்கள் என்பதாகப் பொருள்படும். பண்டைக் காலத்திலே, அரசர் முதலியோர் வாழ்ந்த இடங்கள் நாட்டுக்குத் தலைநகரா யிருந்தன. அவர்களைச் சுற்றியே அறிஞரும், புலவரும், வீரர் முதலியோரும் வாழ்ந்து வந்தனர். இவர்களுடைய வாழ்க்கையும் செயல்களும் ஒழுக்கமும் நாகரிகத்துக்கு எடுத்துக் காட்டாக இருந்தன. தமிழ் மன்னர்கள் அக்காலத்தில் உயர்ந்த நோக்கங்களைக்கொண்டு வாழ்ந்தமையாலும், அவர்களையொட்டி, வீரம், கொடை, கல்வி, நல்லொழுக்கம் போன்ற அரிய மக்களியல்புகள் வளர்ந்தமையாலும், நாகரிகம் என்பதற்கு அன்று சிறந்த பொருள் இருந்தது. புறத்திலேயுள்ள வெறும் பழக்க வழக்கங்கள் மட்டுமன்றி, உள்ளப் பண்பின் உயர்வுக்கே நாகரிகம் என்ற சொல் வழங்கிற்று.

**பெயக்கண்டும் நஞ்சுண் டமைவர், நயத்தக்க**
**நாகரிகம் வேண்டு பவர்**

என்று திருவள்ளுவர் கூறும்போது, இத்தகைய சிறப்பான உள்ளப்பண்பை யுடையவர்களையே 'நாகரிகம் வேண்டுபவர்' என்ற சொற்களால் குறிப்பிடுகிறார்.

காலப் போக்கினால் சொற்பொருள்கள் மாறுபடுகின்றன. நாகரிகம் என்ற சொல்லின் பொருளும் எவ்வளவோ மாறுபட்டிருக்கிறது. இன்று பேச்சு வழக்கிலே, அச்சொல்லானது, நகர வாசத்தை யொட்டிய போலி

வாழ்க்கை, கேடான பழக்க வழக்கங்கள், சிறப்பில்லாத மக்கட் பண்புகள், வீண் ஆடம்பரம் ஆகியவற்றைக் குறிக்கும் ஏளனச் சொல்லாக இருக்கிறது. வாழ்க்கையின் செம்மையையோ ஒழுக்கத்தின் சீலத்தையோ உள்ளப் பண்புகளின் சிறப்பையோ சுட்டுவதற்கு நாகரிகம் என்ற சொல் இன்று பொருத்தமாகாது. எனவே, பண்டை மக்களின் சிறப்பியல்புகளை எடுத்துக் காட்டுவதற்கும் இச் சொல் இன்று பொருந்தாது. அவர்களுடைய கருத்துக்களையும் உள்ளப்பண்பையும் ஒழுக்கத்தையும் 'பண்பாடு' என்ற ஒரு சொல்லால் குறிப்பிடலாம். வள்ளுவர் போன்றூர் நாகரிகம் என்ற சொல்லுக்கு என்ன பொருள் கொள்ளுகிறூர்களோ அதே பொருள்தான் பண்பாடு என்ற சொல்லுக்கும் உரியது.

தமிழருடைய வாழ்க்கை லட்சியங்கள் அனைத்தையும் இளம் பெருவழுதி என்ற அரசன் ஒரே ஒரு பாட்டில் தொகுத்துக் கூறுகிறூன். 'உலகமானது தன் நிலையில் திரியாது ஒரே விதமாக இயங்கிக்கொண்டு வருகிறதே, இது எதனுல்?' என்ற கேள்வியை எழுப்புகிறூன். உலகம் எத்தனையோ மக்கட் சமூகங்கள் சேர்ந்த ஒரு மக்கள் தொகுதி. ஒவ்வொரு சமூகத்திலும் மக்கள் எத்தனையோ பேர். அவரவர் தம்தம் வேலையைக் கவனித்து வந்தால் மட்டும் உலகம் என்று பொதுவாக மக்களினத்தை ஒன்றுய்க் கருத நேராது. மக்களினம் முழுதும் நலம் பெற வேண்டும்; அனைவரும் இன்புற்று வாழவேண்டும் என்ற உயர்ந்த நோக்கமே மேன்மக்களுக்கு இருந்தது. அவர்களுடைய இயல்பு என்ன?

மேன்மக்கள், என்றும், எல்லா நாட்டிலும் இருந்திருக்கிறூர்கள். தமக்கென்று ஒரு பொருள் அவர்கள் விரும்பார். எல்லோரும் வாழவேண்டும் என்ற கொள்கை

யுடையவர்களுக்கு வெறுப்பேது? அவர்களுக்கு அச்சமும் இல்லை. தங்கள் நோக்கம் ஒன்றுதான் அவர்களுக்குக் குறியே யன்றி, வேறு எதையும் அவர்கள் நாடுபவர்களல்லர். நாமார்க்கும் குடியல்லோம் என்ற இறுமாப்பு அவர்களுக்குண்டு. உண்மையை நிலை நாட்டுவதற்காக எதையும் தியாகம் செய்வார்கள். உயிரைக் கொடுத்தேனும், பொய்ம்மையைக் கடிவார்கள். இவ்வாறு உலகுக்காக உழைத்தலில் சிறிதேனும் அயர்வில்லாதவர்கள்.

இத்தகைய சீரிய உள்ளம் படைத்த பெருமக்கள் வாழ்க்கையே லட்சிய வாழ்க்கை, இத்தகையோர் சிலரேனும் வாழ்தலினாலேதான் உலகம் இன்று நிலைபெற்றிருக்கிறது என்று அப்பாண்டிமன்னன் கூறுகிறான்:

**உண்டா லம்ம, இவ் வுலகம்! இந்திரர்**
**அமிழ்தம் இயைவ தாயினும், இனிதெனத்**
**தமியர் உண்டலு மிலரே; முனிவிலர்;**
**துஞ்சலு மிலர்பிறர் அஞ்சுவ தஞ்சி;**
**புகழெனின் உயிருங் கொடுக்குவர்; பழிஎனின்,**
**உலகுடன் பெறினும் கொள்ளலர்; அயர்விலர்;**
**அன்ன மாட்சி அனைய ராகித்**
**தமக்கென முயலா நோன்றாள்**
**பிறர்க்கென முயலுநர் உண்மை யானே!** (182)

இவ்வித வாழ்க்கை ஓர் உயர்ந்த நெறி.

பண்டைத் தமிழ் இலக்கண இலக்கியங்களைப் பயிலும்போது, அகத்துறையிலே 'பரத்தையிற் பிரிவு' என்ற ஒரு செய்தியை அடிக்கடி நாம் காண்போம். தனக்கேற்ற காதலியை மணம் செய்து கொண்டு வாழ்கிற தலைமகன், எப்படியோ, ஒரு பரத்தையினிடம் ஈடுபடுகிறான்; இது காரணமாகத் தன் நாயகியைப் பிரிந்து பரத்தையோடேயே கூடி ஒழுகுகிறான்; இது, நாயகிக்கும் அவளைச் சேர்ந்தோர்க்கும் எவ்வளவோ துயரத்தை விளைவிக்கிறது என்

பதே பழைய நூல்களிற் கண்ட பொருள். பின்வந்த இலக்கணங்களும் கோவை முதலிய அகத்துறை இலக்கியங்களும் இச்செய்தியையே பலபட விரித்துரைக்கின்றன.

பெருங்காப்பியமாகிய சிலப்பதிகாரமானது இப் பரத்தை யொழுக்கத்தையே அடிப்படையாக வைத்துக் கதையை நடத்திச் செல்கிறது. மாதவி, காதல் மாதவியாகலாம். ஆயினும், தான் கொண்ட மனைவியைக் கோவலன் பிரிந்து மாதவியோடு கூடி வாழ்ந்ததன் விளைவே துயரம் மிகுந்த அக்காப்பியக் கதை.

ஒழுக்க நெறி பற்றி இன்று நாம் கொண்டுள்ள கருத்துக்களை வைத்து இப்பழைய செய்திகளைப் பார்க்கும் போது, அவை நமக்கு இழிவாய்த் தோன்றுகின்றன. காதல் துறையிலாகட்டும், காப்பியத்திலாகட்டும், பண்டைத் தமிழர் பரத்தையர்பால் படர்தலை நெறியாகக் கொண்டார்களென்றே நாம் எண்ணும்படி யிருக்கிறது. பிறன்மனை நோக்காத பேராண்மை அவர்களிடமில்லை என்று எண்ணுவோம். பரத்தையரைப்பற்றி மிகுதியாகக் கூறியிருப்பது நமக்கு ஓரளவுக்கு அருவருப்பை யுண்டு பண்ணுகிறது. தமிழர் வாழ்க்கை இவ்வளவுதானு என்று கூட எண்ணும்படி யிருக்கிறது.

ஆனல், இது உண்மைதானு என்பதை நாம் சிறிது ஆராய வேண்டும். புறநானூற்றின் துணைகொண்டு ஆராய்ந்தால், பண்டைத் தமிழர், உண்மைக் காதல் வாழ்க்கையை, அதாவது, இல்லற வாழ்க்கையையே உயர்வாகப் போற்றினர் என்பதும், பரத்தையோடு கூடிவாழும் வாழ்க்கையை இழிவென்றே கருதினர் என்பதும் புலனுகும். சில உதாரணங்களால் இதை அறியலாம்.

ஊரிலே திருவிழாத் தொடங்குகிறது. ஏழைத் தொழிலாளி யொருவன் விழாவுக்குச் சென்று வேலை

செய்து சம்பாதிக்க எண்ணுகிறான். அதே சமயத்தில், அவனுடைய மனைவி, கருப்பந்தரித்தவள், குழந்தைபெறும் பருவத்திலிருக்கிறாள். அன்று, பொழுதோ ஆகிவிட்டது. மழை வேறு, பெய்கிறது. தரை யெல்லாம் ஈரமாயிருந்தலால், தன் மனைவி படுத்திருப்பதற்காக அவன் கட்டில் பின்னுகிறான். மிக்க வேகமாய்ப் பின்னுகிறான். பின்னுகிற வேகத்தாலேயே, மனைவியிடத்து அவனுக்குள்ள பரிவை நாம் உணர முடிகிறது :

சாறுதலைக் கொண்டெனப் பெண்ணீற் றுற்றெனப்
பட்ட மாரி ஞான்ற ஞாயிற்றுக்
கட்டில் நிணக்கும் இழிசினன் கையது
போழ்தூண் டூசியின் விரைந்தன்று மாதோ ! (82)

ஓர் இழிசினன் அன்பை அவன் செயலிலே வைத்து இப்பாடல் காட்டுகிறது. ஓர் அரசனது அன்பு எப்படியிருக்கிறதென்று இனிப் பார்க்கலாம்.

**மா**க்கோதை என்ற சேரமன்னன் ஒருவன். அவனுடைய காதல் மனைவி இறந்து விட்டாள். சேரன் எவ்வளவோ துயரப்படுகிறான். பட்டு என்ன? இறந்த மனைவியை ஈமத்துக்குக் கொண்டுபோய்க் கட்டையடுக்கி, அதிலே அவள் உடலைக் கிடத்தித் தீ மூட்ட, உடல் வெந்து சாம்பலாகி விட்டது. அவள் பிரிந்து மேலுலகம் போய்விட்டாள். இவ்வளவையும் அவன் அருகிலிருந்து பார்த்துக் கொண்டிருக்கிறான். அப்போது, அவன் மனத்திலுள்ள துயரம் புதிய வேகத்தோடு வந்து தாக்குகிறது. 'எவ்வளவோ கொடியது தான், என்னுடைய துயரம். ஆயினும் என்ன? அதனால் என் உயிர் இன்னும் போய்விடவில்லையே! மனைவி இறந்த பின்னும், நான் இன்னும் உயிர் வாழ்கிறேனே!' என்று தன் நிலையைக் குறித்து இரங்குகிறான்.

மனைவியினிடத்துக் கணவன் கொண்ட அன்பைக் குறிக்கும் இதை யொத்த செய்தியை இலக்கியத்திலே வேறெங்கும் காண முடியாது.

பூதப் பாண்டியன் என்ற மன்னன் போருக்கு வந்த பகைவர்மீது எதிர்த்துக் கிளம்புகிறான். பகைவரைப் போரில் தொலைக்கா விட்டால், தான் என்ன ஆவது என்று வஞ்சினம் கூறுகிறான்.

என்னொடு பொருதும் என்ப : அவரை
ஆரமர் அலறத் தாக்கித் தேரொடு
அவர்ப்புறங் காணே னாயின், சிறந்த
பேரமர் உண்கண் இவளினும் பிரிக ! (71)

என்கிறான். பகைவரைத் தான் புறமுதுகிட்டு ஓடச் செய்யா விட்டால், தன் மனைவியை விட்டுத் தான் பிரிபவனாக என்கிறான். கொடுமைக் கெல்லாம் கொடுமை, மனைவியைப் பிரிதல்; இக்கொடுமை தனக்கு நேர்வதாக என்று மிக்க ஆத்திரத்தோடு கூறுகிறான்.

இதனினும் இழிவானது மற்றொன்றிருக்கிறது. நலங்கிள்ளி என்ற சோழ மன்னன் அதைச் சொல்லுகிறான். பகைவரைத் தான் வெல்லாவிட்டால், காதல் என்பதையே அறியாத பொதுமகளிரோடு கூடுகின்ற பொருந்தாத இழிநிலை தனக்கு வருவதாக என்கிறான்.

தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
பல்லிருங் கூந்தல் மகளிர்
ஒல்லா முயக்கிடைக் குழைகஎன் தாரே ! (73)

எனவே, பொது மகளிர் முயக்கத்தை எவ்வளவு கீழாக இவ்வரசன் கருதினான் என்பதை நாம் காண்கிறோம்.

ஆகவே, பரத்தையர் கூட்டுறவு என்பது பண்டை இலக்கியங்களில் அடிக்கடி நாம் கண்ட போதிலும், அது தமிழர் பண்பாட்டுக்கு ஒத்ததன்று என்பதையும், அவ்

வுறவு மிக்க இழிவு தருவது என்றே அறிவுடைய பெருமக்கள் கருதினர்கள் என்பதையும் புறநானூறு நமக்கு எடுத்துக் காட்டுகிறது.

அக்கால மக்கள் வாழ்க்கையில் சிறப்பாய்ச் சொல்லத்தக்க இரண்டு பண்புகள், வீரம், கொடை என்பன. வீரத்தை விளக்கிக் காட்டும் பல வரலாறுகளைப் புறநானூற்று வாயிலாக நாம் அறிவோம். பொதுவாக அவர்களுடைய போர்த்திறம் எத்தகையது என்பதை மட்டும் நாம் இங்கே காணலாம்.

இன்றையப் போர் எவ்வளவு இரக்கமற்றது என்பதைப் பத்திரிகை வாயிலாகவும் நம் நாட்டிற் சில இடங்களில் உள்ள பஞ்சத்தின் வாயிலாகவும் உணர்கிறோம். பண்டைத் தமிழ் மன்னருடைய போர் முறையை நாம் ஆராயும்போது, அப்போரிலும் அவர்களுக்கு இரக்கவுணர்ச்சியே மேம்பட்டிருக்கக் காண்கிறோம். குழந்தையையும் பெண்டிரையும் ஒருங்கே கொன்று குவிக்கும் இக்காலத்து 'நாகரிகப்' போரை அவர்கள் அறியார். போர் தொடுக்கு முன்னே, பகைவன் நாட்டிலுள்ள பசு நிரையும், அந்தணரும், பெண்டிரும், பிணியாளரும், புதல்வனில்லாதோரும் அகன்று செல்லுமாறு ஒரு பாண்டியன் பறையறைவித்தான் என்று ஒரு பாடல் கூறுகிறது. இப்படி அறிவிப்பதே போருக்குரிய அறமாம் :

ஆவும், ஆனியற் பார்ப்பன மாக்களும்,
பெண்டிரும், பிணியுடை யீரும், பேணித்
தென்புல வாழ்நர்க் கருங்கடன் இறுக்கும்
பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்,—
எம்மம்பு கடிவிடுதும்,—நும்மரண் சேர்மின்என
அறத்தாறு நுவலும் பூட்கை. (9)

போரிலே வெற்றி தோல்வி என்பது மாறி மாறி வருவது. ஆனல், வீருக்குத் தோல்வி என்பது கிடையாது.

புறங்காட்டுவதனினும் பார்க்க உயிர் விடுதலே மேலானது, எளியது என்று தமிழ்வீரர் எண்ணி வந்தார்கள். மார்பிலே வேல் தைக்கலாம், புண்படலாம், அது வீரத்தின் அடையாளம்; ஆனால் புறத்திலே வேல் தைத்துப் புண் உண்டாயிற்றென்றால், அது, இவ் வீரன், புறங்காட்டி ஓடியதால் ஏற்பட்டது என்று தானே ஆகும்? இதனால் புறப்புண் படுவதை மிக்க இழிவாய்க் கருதி வந்தார்கள். கரிகால் வளவனோடு பெருஞ்சேரலாதன் என்ற சேரன் பொருதான்; போரிலே சோழன் எறிந்த வேலானது சேரன் மார்பில் தைத்து உருவி முதுகுப் புறமாக வெளி வந்துவிட்டது. இதைக் கண்டபோது அம் மன்னனுக்கு அவமானம் பொறுக்க முடியவில்லை. எப்படியும் புறப்புண் புறப்புண் தானே என்று வருந்தி உயிரைவிடத் துணிந்து விட்டானாம்.

**பு**றநானூறு நமக்கு உணர்த்துகின்ற தமிழர் இயல்புகளிலே, வீரத்துக்கு அடுத்த முதன்மையுடையது கொடைத்திறம். பண்டைத் தமிழ் மன்னரும் வள்ளல்களும், கொடுப்பதையே ஓர் அருங்கலையாகப் போற்றி வந்திருக்கிறார்கள். 'ஈ யென இரத்தல் மிக்க இழிவானது; ஈயேன் என்னல் அதனினும் இழிவானது' என்று கழைதின்யானையார் என்ற புலவர் கூறுகிறார் (204). 'கொடுத்தல் உயர்ந்ததுதான். சந்தேகமில்லை. ஆனால், கொடுத்ததைக் கொள்ளேன் என்று மறுக்கும் உளப்பாங்கு வருமானால் அது எவ்வளவோ மேலானது' என்றும் கூறுகிறார்.

பாண்டியன் நெடுஞ்செழியனோடு பொருதற்காக அவனுடைய பகைவர் திரண்டு வருகிறார்கள். அவனும் போருக்குப் புறப்படுகிறான். புறப்படும்போது, எதிர்த்த பகைவரைத் தான் வெல்லாதுபோனால், எப்படிப்பட்ட

இழிநிலை தனக்கு வரும் என்பதை அவன் கூறுகிறான். பல இழிநிலைகளைக் கூறிவிட்டு, இறுதியாகக் கூறுகிறான் : "என் சுற்றத்தார் போன்றார் மிக்க துயரமுறும்படியாகவும், என்னிடம் வந்து இரப்போருக்கு இல்லையென்று சொல்லும்படியாகவுமுள்ள இழிந்த வறுமை நிலையை நான் அடைவேனாக" என்று வஞ்சினம் கூறி முடிக்கிறான்:

**புரப்போர் புன்கண் கூர,**
**இரப்போர்க் கீயா இன்மையான் உறவே.** (12)

எனவே, கொடுக்கவியலாத நிலையே மிக்க இழிவானது என்று நம் மக்கள் எண்ணி வந்தார்கள் என அறிகிறோம். பசியோடு வந்த ஒரு வேடனுக்கு உணவாகவேண்டும் என்ற எண்ணத்துடன், இரண்டு பறவைகள், தங்கள் உடலையுண்டு அவன் பசியாறட்டும் என்று எண்ணி, நெருப்பில் வீழ்ந்து உயிர் துறந்தன என்பது பழங்கதை. குமணன் என்ற வள்ளல் புலவருடைய வறுமையைக் களைய எண்ணித் தன் தலையையே வெட்டிப் பரிசில் வேண்டிய புலவரிடம் தந்தான் என்று புறநானூறு கூறுகின்றது.

இச் சிறப்புக்களெல்லாம் பெற்ற கொடைத்திறமே உயர்வானது என்ற நோக்கம் பண்டைத் தமிழருக்கு எவ்வாறு விளைந்தது ? தானம் செய்வது சிறந்த புண்ணியம், அதுகாரணமாக மறுமையிலே நல்ல நிலைபெற்றுச் சுகமடையலாம் என்ற கருத்தா கொடைக்கு இவ்வளவு பெருமையைத் தந்தது ? அன்று என்கிறார் உறையூர் முடமோசியார் என்ற புலவர். கொடையை, அதாவது அறத்தை, மறுமையிலே பலன் பெறுதல் வேண்டும் என்ற நோக்கத்தோடு இம்மையிலே விற்கும் வணிகனல்லன், ஆய் என்ற வள்ளல் என்று அவர் கூறுகிறார். சான்றோருடைய நெறி அறநெறி ; ஆகவே, அந்த நெறியைப்பற்றி ஒழுகுகின்றான், ஆய் :

இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்எனும்
அறவிலை வணிகன் ஆய்அலன் ; பிறரும்
சான்றோர் சென்ற நெறியென,
ஆங்குப் பட்டன்று அவன்கை வண்மையே. (134)

'மேலுலகம் இல்லெனினும் ஈதலே நன்று' என வள்ளுவர் கூறியதை நாம் இங்கே நினைவு கூரலாம். கொடை வழங்குவதாகிய நெறியைச் சான்றோர் ஏன் மேற்கொள்ளவேண்டும் என்ற கேள்வி அடுத்து எழுகின்றது. ஈவதிலே என்ன இருக்கிறது? எதற்காக ஈதல் வேண்டும் என்று நாம் நிச்சயமாய்க்கேட்போம். இக்கேள்விக்குத் திருவள்ளுவர் தாம் அனுபவத்தில் கண்ட அரிய விடையை அழகாக உரைக்கிறார். செல்வமானது யாரிடத்திலும் நிலைத்திருப்பதன்று. தானே வைத்திருக்கலாம் என்று ஒருவன் நினைத்தால், நிச்சயம் அவனை விட்டுச் செல்வம் சென்றுவிடும் தன்மை பெற்றிருக்கிறது. ஆகவே, செல்வத்தால் இன்பம்பெற வேண்டுமென்றால், அதைத் தானே ஒருவன் மனமாரக் கொடுத்துவிடுவதுதான் தக்கது ; வைத்திருக்க எண்ணினால் இழக்கப்போவது நிச்சயமல்லவா ?

ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல்? தாமுடைமை
வைத்திழக்கும் வன்கண வர் !

கொடுப்பதனால் விளையும் இன்பத்தை அறியாதோரே அதை வைத்திருக்க எண்ணிப் பின் இழந்து துன்புறும் அறிவில்லா மக்கள் என்கிறார் திருவள்ளுவர்.

பண்டைத் தமிழ் மக்கள் ஈத்துவக்கும் இன்பம் அறிந்தவர்கள். வைத்திழக்கும் வன்கண்மை அவர்களிடம் இல்லை. இந்த இயல்பை நக்கீரர் கூறுகிறார்.

செல்வத்துப் பயனே ஈதல் ;
துய்ப்பேம் எனினே, தப்புந பலவே. (189)

என்றார் அவர். செல்வத்தை ஈவதே இன்பம் என்பது மட்டுமின்றி, இவர் இன்னும் மேற்சென்று, செல்வம் பெற்

றதே ஈவதற்காகத்தான் என்று வலியுறுத்திக் காட்டுகிறார். எல்லாம் எனக்கு எனக்கு என்று ஒவ்வொன்றையும் வலிந்து பற்ற முயலும் மக்கள் வாழும் இன்றைய உலகிலே இதனினும் சிறந்த உள்ளப்பண்பை நாம் சுட்டிக்காட்டுவதற்கில்லை.

'செல்வத்துப் பயனே ஈதல்' என்பதைச் சொல்லுதல் எளிது, உணர்ந்து நடத்தல் அரிது என நாம் எண்ணலாம். உண்மைதான். ஆனால், அவ்வுண்மையை யுணர்ந்து அதன் வழி ஒழுகினோரும் அக்காலத்து இருந்தார்கள் என்பதையும் புறநானூறே நமக்கு உணர்த்துகிறது.

**வா**னத்திலே வெண்மேகத்தைப் பார்க்கிறோம். அது மழை பொழிகிறதா? பொழிவதில்லை. ஆனால், சற்று நேரத்துக்கெல்லாம் அது கடலுக்குச் சென்று கொஞ்சம் நீரை உண்டு கரு நிறம் பெற்று வருகிறது. நிறையச் செல்வம் பெற்றவுடனே அது என்ன செய்கிறது? தான் முகந்து வந்த நீராகிய செல்வமனைத்தையும் நிலத்துக்கு வழங்கி விட்டு முன்போல் வெறுங்கையோடு அப்பாற் சென்றுவிடுகிறது. பெற்ற செல்வத்தைக் கொடுத்துவிடவேண்டும் என்ற தருமத்தை அப்படியே கடைப்பிடிக்கிறது. வயலென்றும் மலையென்றும் பாலை என்றுமா அது பார்க்கிறது? இல்லை. அறு குளத்து உகுக்கிறது. அகல் வயலில் பொழிகிறது. உறுமிடத்து உதவாத உவர் நில மூட்டுகிறது. எவ்வகையிலும் வரையாமல் பெய்கிறது.

உத்தமமான ஈகையின் இயல்பும் இதுவேதான். பாத்திரமறிந்து பிச்சையிடு என்பதெல்லாம், பலனைக் கருதிச் செய்யும் அறம். உள்ளத்திலிருந்து தானே விளைவதன்று; இது, புறநானூறு காட்டும் தமிழர் பண்பாட்டுக்கு மாறுபட்டதாகும். ஈவதிலே இன்பம் காண்பவன், தன் கொடையை யார் பெறுகிறார் என்பதிலே ஏன் கருத்தைச் செலுத்துகிறான்? அவனுடைய உள்ளம் நெகிழவேண்டும்:

அவ்வளவுதான். கைகள் தாமாகக் கொடை வழங்குகின்றன.

**பா**ரி ஒருநாள் காட்டிலே வேட்டையாடித் திரும்பினன். வழியிலே ஒரு மெல்லிய முல்லைக் கொடி படர்வதற்குக் கொம்பில்லாமல் காற்றிலே தளர்ந்து ஆடிக்கொண்டிருக்கக் கண்டான். கொடியின் பசுமையும் இளமையும் தனிமையும் அவனுள்ளத்தை நெகிழ்வித்தன. அப்படியே தேரைவிட்டுக் குதித்தான். கொடி படரும்படி தேரை அதனருகே விட்டுவிட்டுத் தன் ஊர் திரும்பிவிட்டான்.

பாரிக்கு ஆளில்லையா? அவர்களை அழைத்து முல்லை படர்வதற்கேற்ற பந்தர் போடச் சொன்னல் போடமாட்டார்களா? இந்த முறையிலே நாம் நினைப்போம். ஆனல் பாரியின் பண்பட்ட உள்ளம் இப்படி நிதானமாக எண்ணவில்லை. முல்லையின் துன்பத்தை அது கண்டது, உடனே துன்பத்தை நீக்க வழி' தேடிற்று. தேரை நிறுத்தி அப்பால் வந்த மறுகணமே அவன் முல்லையையும் தேரையும் மறந்தே போயிருப்பான்.

**கா**ர்காலம். வானத்திலே மேகம் வரக் கண்டு, மயிலானது ஆனந்தமாகத் தன் தோகையை விரித்து ஆடிக்கொண்டிருக்கிறது. பேகன் அவ்வழியே வருகிறன். அவனுடம்பே குளிரில் நடுக்குகிறது. பொன்னும் பட்டும் இழைத்த கலிங்கம் (போர்வை) போர்த்திருக்கிறன். வழியிலே மயிலைக் காண்கிறன். 'அடடா, நானே இந்தக் குளிரில் இவ்வளவு நடுங்குகிறேன். ஒரு போர்வையும் இல்லாத இம் மெல்லிய மயில் என்ன செய்யும்!' என்ற இரக்கம் அவனுக்கு உண்டாகிறது. அந்தக்கணமே, தான் அணிந்திருந்த போர்வையை அம்மயிலின்மீது போர்க்குமாறு வீசி எறிந்துவிட்டு வீடு திரும்புகிறன்.

**பு**த்தர்பிரான் பிறர் துக்கங்காணச் சகியாராய், பிறர் துக்கங் களைய வழியென்ன என்று காண்பதற்காகத் தம்

மனைவியையும், மகனையும் அரசவாழ்வையும் துறந்துசென்றார். பிறர் துக்கம் காணச் சகியாத இயல்பு தமிழர் பண்பாட்டில் ஒரு சிறந்த அம்சம் என்பதை இவ் வரலாறுகள் தெளிவாக உணர்த்துகின்றன.

மற்றோரம்சமும் இவ்வரலாறுகளிலே புலனாகின்றது; அதாவது, இயற்கையழகைக் கண்டு அனுபவிக்கவல்ல ஓர் அழகுணர்ச்சி பண்டைத் தமிழ் மக்களிடத்து இருக்கக் காண்கிறோம். ஒரு முல்லைக் கொடியின் அழகினும் ஒரு மயிலின் அழகினும் இருவர் தம் உள்ளத்தைப் பறிகொடுத்ததன் பயனாக அல்லவா இத்தகைய அரிய கொடை அளிக்க நேர்ந்தார்கள்? எனவே, அவர்களிடம் வீரமும் கொடையும் சிறப்பாக அமைந்தமை போலவே, நுட்பமான கலையுணர்ச்சியும் கருணையும் பொருந்தியிருந்தன.

முல்லைக் கொடியானது பாரியினுடைய கருணையைத் தூண்டிவிடக் காரணமாயிருந்த தென்பதை மேலே பார்த்தோம். அதே கொடி ஒரு கவிஞர் இதயத்திலே எத்தகைய சோகத்தைத்தான் தோற்றுவிக்கிறது! முல்லை அழகாகப் பூத்திருக்கிறது. அவ்வழியே கீரத்தனார் என்ற புலவர் வருகிறார். அவருடைய நண்பனும் அந்நாட்டுக் குரியவனுமான சாத்தன் என்பவன் இறந்துபோய்விட்டான். அவன் இறந்த துக்கத்தில் மூழ்கிய புலவருக்கு முல்லையினிடத்து இரக்கமுண்டாகிறது. பூத்தமுல்லையை அனுபவித்தற்கு மக்கள் இல்லை. எல்லோரும் சாத்தன் இறந்த துயரத்தில் மூழ்கிக் கிடக்கிறார்கள். முல்லை மலர்ந்தால் யாதுபயன் என்று கேட்கிறார்:

**இளையோர் சூடார், வளையோர் கொய்யார்,**
**நல்யாழ் மருப்பின் மெல்ல வாங்கிப்**
**பாணன் சூடான், பாடினி அணியாள்,**
**ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த**

**வல்வேற் சாத்தன் மாய்ந்த பின்றை,**
**முல்லையும் பூத்தியோ ஒல்லையூர் நாட்டே?**

முல்லையின் அழகிலே பண்டைத் தமிழ் மக்கள் ஈடுபட்டிருந்ததை இவ்வரலாறுகள் காட்டுகின்றன. அழகிலே ஈடுபட்ட அம் மக்களுக்குக் கலையுள்ளம் அமைவது இயற்கை. பலதிறப்பட்ட கலைகளிலும் அவர்கள் வல்லவர்களாயிருந்தார்கள். இதுபற்றிய ஒரு செய்தியைமட்டும் இங்கே குறிப்பிடலாம். இசைபற்றிய கிளர்ச்சிகள் மலிந்த இக்காலத்தில் இது சுவையுடையதாயிருக்கும்.

இசை நுட்பங்களை யெல்லாம் தமிழர் எவ்வளவோ பழங்காலமாகக் கண்டு பாடிவந்திருக்கிறார்கள். இசையை எவ்வளவோ வளர்த்தும் வந்திருக்கிறார்கள். நாயன்மார் காலத்துக்கு முன்னமே தொடங்கித் தமிழ்ப் பண்கள் தமிழக மெங்கும் ஒலித்து வந்திருக்கின்றன. சோலையிலுள்ள வண்டுகளெல்லாம் அருமையாகப் பண்பாடுகின்றன என்று நம் கவிஞர் சொல்வார்கள்.

**சேருடு செங்கழுநீர்த் தாதாடி**
**மதுவுண்டு சிவந்த வண்டு**
**வேருய வுருவாகிச் செவ்வழிநற்**
**பண்பாடும் மிழலை யாமே!**

என்று ஞானசம்பந்தர் பாடுகிறார்.

**மலகரி குறிஞ்சி தேசி பைரவி சுரும்பு பாடும்**
**வயலருணை மங்கை பாகரே!**

என்கிறார் மற்றொருவர்.

இவ்வாறாக, வண்டுகளும் பண்பாடின என்று சொல்லத்தக்க அளவுக்கு இசை வளர்ந்திருந்தது. புறநானூற்றின் காலத்திலே இவ்வளர்ச்சியைக் காண்கிறோம். வெவ்வேறு பண்களுக்கு வெவ்வேறு உணர்ச்சிகளைத் தூண்டிவிடும் இயல்பு உண்டு. இவ்வியல்புகளை யொட்டி, இன்ன

இன்ன பொழுதிலே இந்த இந்தப் பண்ணைத்தான் பாடலாம் என்ற வரையறையும் ஏற்பட்டிருந்தது. காலையிலே மருதம் பாடுவதும் மாலையிலே செவ்வழி பாடுவதும் மரபு; நள்ளி என்ற ஒரு வள்ளலைப் பாராட்டும்போது, ஒரு புலவர் இவ்வியல்பை மிக்க நயமாகக் குறிப்பிடுகிறார்.

பாணர்களெல்லாம் தங்கள் ஏழ்மை காரணமாகத் தலைவனை யடுத்துச் சென்று பாடும்போது, முறையாக அவ்வவ் வேளைக்குரிய இராகத்திலே பாடல்களை அழகாகப் பாடுவது மரபாயிருந்தது. ஆனால், இந்த நள்ளி கொடுத்த கொடையின் மிகுதியினாலே, பாணர்கள் பாடிப் பிழைக்கவேண்டிய அவசியம் இல்லாது போய்விட்டது. செல்வச் செருக்கு அவர்களிடம் மிகுதியாகவே, இசை மரபையும் கைவிட்டார்கள். காலைக்குரிய மருதப்பண்ணை மாலையில் பாடுகிறார்கள், மாலைக்குரிய செவ்வழிப் பண்ணைக் காலையில் பாடுகிறார்கள். 'நள்ளியின் வண்மையால் இவர்கள் இப்படிக் கெட்டுப் போய்விட்டார்களே' என்று புலவர் நகைச்சுவை பொருந்தக் கூறுகிறார் :

**நள்ளி வாழியோ நள்ளி ! நள்ளென்**
**மாலை மருதம் பண்ணிக் காலைக்**
**கைவழி மருங்கிற் செவ்வழிபண்ணி**
**வரவெமர் மறந்தனர்: அது நீ**
**புரவுக் கடன்பூண்ட வண்மை யானே.** (149)

இத்தகைய அருங்கலைச் சிறப்புக்களெல்லாம் பண்டைத் தமிழரிடம் பொருந்தியிருந்தன வென்பதைப் புறநானூறு தெரிவிக்கிறது.

கொடிய அரக்கத்தனமான போர் நடக்கும் உலகத்திலே போருக்கு மத்தியில் நாம் வாழ்கிறோம். வல்லரசு என்ற கொடிய சொற்றொடரொன்று புதிதாக ஏற்பட்டிருக்கிறது. அரசு என்றாலே, கொடுமை செய்தால்

போதும், செங்கோல் வேண்டாம் என்றே இத்தொடர் தெரிவிக்கிறது. ஓர் அரசுக்கு வலி மிகுதியாயிருந்தால் பிறரைத் துன்புறுத்துவதே அதன் தொழில் என்பதையும் இன்று காண்கிறோம். இந்த நினைவுகளோடு புறநானூற்றை நாம் பார்க்கும்போது, அங்குள்ள போர்களும் வீரமும் பிறவும், நமக்குத் தவறான எண்ணத்தை உண்டாக்கிவிடுதலுங் கூடும். அக்காலத்து மக்கள் போரையும் கொடுமையையுமே சிறந்த குறிக்கோளாகக் கொண்டிருந்தார்களோ என்று நாம் ஐயுறுதலுங் கூடும்.

இவ்வையம் பொருந்தாது. உலகத்திலே பொய்யே மலிந்து போயிருக்கிறது; இதனால் மக்கள் பொய் பேசுவதே லட்சியமாகக் கொண்டார்கள் என்று கருதமுடியுமா? மெய்ம்மைதான் மக்களுடைய லட்சியம். இதேபோல, போர்கள் எவ்வளவோ மலிந்திருந்தபோதிலும், அன்பும் அறமுமே குறிக்கோளாயிருந்தன. மாந்தரஞ் சேரல் இரும்பொறை என்ற சேரனது ஆட்சிச் சிறப்பை ஒரு புலவர் கூறுகிறார். அவன் போர்வலி மிக்கவன் என்பது உண்மை. ஆனால் அவன் போரிட்டது கிடையாது. அவனுடைய வாள் உறைக்குள்ளேதான் இருக்கும்; அம்பு தூணிக்குள்ளேதான் இருக்கும். தூணியைவிட்டு வெளிவாராத அம்பே அவனுடைய நாட்டுக்குப் பெரிய அரணாக இருந்தது. மக்கள் எவ்விதப் பயமுமின்றிச் சுகமாக வாழ்ந்தார்கள்; அறநெறி வாழ்க்கை எங்கும் பொருந்தியிருந்தது.

> அம்பு துஞ்சுங் கடியரணால்
> அறந் துஞ்சுஞ் செங்கோலையே!

என்றார் புலவர். அறத்தை நிலைநாட்டுவதற்கே அவனுடைய அம்பு பயன்பட்டதாம். கொலைக்கும் கொள்ளைக்கு

மென்றே படை பெருக்குகின்ற இக்காலத்தில், புலவர் கருத்தை உணர்வதும் கடினமல்லவா? எத்தனை நகரங்கள் அழிவதையும் எரிவதையும் இன்று பத்திரிகை வாயிலாக நாம் அறிகிறோம்! எத்தனைக் கப்பல்கள் எரிகின்றன! தீ மூட்டுவதற்கென்றே எத்தனை விதமான கருவிகள், முயற்சிகள்! பண்டைத் தமிழ் மக்களும் இருவகைத் தீயின் கொடுமையை உணர்ந்திருந்தார்களாம். ஒன்று, சோற்றை ஆக்கும் தீ; மற்றொன்று, சூரியனுடைய வெப்பமாகிய தீ! தென்னிந்தியாவில் அமைந்த தமிழ்நாடு சூரியனுடைய வெப்பத்தினின்றும் தப்ப முடியாதல்லவா?

**சோறு படுக்குந் தீயோடு**
**செஞ்ஞாயிற்றுத் தெறலல்லது**
**பிறிதுதெற லறியார்நின் நிழல்வாழ் வோரே!**

அம்புதுஞ்சுங் கடியரணும் அறந்துஞ்சுஞ் செங்கோலு முடைய மாந்தரஞ்சேரல் நாட்டில் வாழ்ந்தோர் சோறாக்கி உண்டு வாழ்தலல்லது என்ன கொடுமையை அறியப் போகிறார்கள் என்கிறார் புலவர்.

இனி, அந்த மக்களுக்குப் படை உண்டா? ஆம், உண்டு: வேல், வாள், ஈட்டி, கேடயம், வில், அம்பு, கணிச்சி, குந்தம் என்று நாம் வரிசையாகச் சொல்ல எண்ணுவோம். இப்படைகள் இருந்தமை உண்மை, இவற்றைக் கொண்டு அவர்கள் போரிட்டதும் உண்மை தான். ஆனால், இவைகளே முடிவென்று கொண்டு மக்கள் வாழவில்லை. படைக்கலம் ஏந்தி வாழ்வதையே அம்மக்கள் லட்சிய வாழ்வாகக் கொள்ளவில்லை. பின் எதைக் கொண்டார்கள்? புலவர் சொல்லுகிறார்:

**நாஞ்சில் அல்லது படையும் அறியார்!**

கலப்பையாகிய ஒரே படைதான் அவர்கள் அறிவார்கள்.

பூமியைத் திருத்தி நாட்டுக்குச் செல்வத்தைத் தரவல்ல உழுபடையொன்றே அவர்களறிந்த படை.

இக்காலத்து அரசியல் நூல், பொருளாதார நூல், சமுதாய நூல் ஆகிய யாவும் செல்வத்தைப் பற்றி ஒரு முகமாக ஒரே முடிவைத்தான் கூறுகின்றன. நாட்டுக்கு உண்மையான செல்வத்தைத் தருபவன் யார்? உத்தியோகஸ்தனு? வியாபாரியா? கப்பலோட்டியா? போர் வீரனு? இவர்கள் யாவரும் அல்லர்.

வெறும் நிலத்தைத் திருத்தி நீர்பாய்ச்சி அதிலே ஒரு பிடி விதையை விதைத்து நூறு பிடியாக அறுவடை செய்கிருனே உழவன், அவனெருவன்தான் நாட்டின் செல்வத்தை விளைவிக்கிருன் என்று அனைவரும் ஒத்துச் சொல்கிருர்கள். பொன்னும் வெள்ளியும் ஈட்டினுல் மட்டும் செல்வமாகிவிடாது. ஒன்றும் இல்லாத இடத்திலே புதிதாகச் சில உணவுப்பொருளைத் தோன்றச் செய்பவனே செல்வத்தைத் தோன்றச் செய்கிருன். செல்வத்தைச் சிருஷ்டிக்கிருன். இந்த அரிய உண்மையையும் தமிழர் கண்டார்கள் என்பதை, 'நாஞ்சில் அல்லது படையும் அறியார்' என்று பாடிய நம் புலவர் எடுத்துக்காட்டுகிருர்.

உண்மையான செல்வம், பசியைப் போக்கவல்ல உணவுப் பொருளைத் தரும் பயிர்த்தொழிலே என்று கண்ட தமிழ் மக்கள், பசியைப் போக்குவதே சிறந்த அறமாகக் கருதினுர்கள் என்பதைச் சொல்லவேண்டுவதில்லை. பஞ்சத்திலடிபட்ட இன்றைய உலகத்திலே 'தனி ஒருவனுக்கு உணவில்லை எனில் சகத்தினை அழித்திடுவோம்' என்ற முழக்கம் ஓங்கிவருகிறது. மக்கள் தொகை பெருகி வருகிறது. அதற்கேற்ப அழித்தல் வேலையும் கொடுமையும் பெருகி வருகின்றனவே யொழிய, பயிர்த்தொழில் போன்ற ஆக்கல் வேலை பெருகவில்லை. எனவே, "சோறு

வேண்டும்'' என்ற கூக்குரல் மிகுதியாகிறது. பயிர்த் தொழிலே மிகுதியாயுள்ள நாட்டில் மக்கள் உணவின்றிச் சாகிறார்களென்பதைவிடக் கொடுமை வேறு உண்டா ?

தனி யொருவனுக்குணவில்லை என்ற நிலைக்குத் தமிழர் சரித்திரத்தில் இடங்கிடையாது ; அது தமிழர் மரபும் அன்று. 'ஒருவேளை கூட ஒருவனுக்கு உணவு இல்லை என்றால் அந்த நிலையை என்னால் தாங்கமுடியாது' என்கிறார் ஔவையார் :

ஒருநாள்
ஒருபொழு தொருவன் ஊணொழியப் பார்க்கும்
நேர்நிறை நில்லா தென்னுமென் மனனே
நேர்நிறை நில்லா தென்னும் மனனே !

என்பது தனிப் பாடல். மருதன் இளநாகனார் ஒரு பாண்டியனை வாழ்த்தும்போது, இதே கருத்தில், "உனது நாட்டில், இல்லாதோர் இல்லையென்று போம்படியாக, நீ நெடுநாள் அரசுபுரிவாயாக!'' என்று வாழ்த்துகிறார்.

இல்லோர் கையற,
நீ நீடு வாழிய நெடுந்தகை !

தனியொருவனுக்குணவில்லை என்று சொல்லும் இழிந்த நிலை நேராதபடி எல்லோரும் சுகமே வாழவேண்டும் என்ற குறிக்கோளை இதிலே காண்கிறோம்.

இவ்விதமாக, புறநானூற்றின் மூலமாய்த் தமிழர் பண்பாட்டின் இயல்புகளான வீரம், கொடை, காதல், கருணை அழகுணர்ச்சி, கலையுணர்ச்சி முதலியவற்றைப் பார்த்தோம். இறுதியாக, தமிழருடைய இதயம் எங்கே இருக்கிறதென்ற வினாவுக்கும் ஒரு பாடல் விடை தருகிறது. விரிந்த சம நோக்குடைய உள்ளத்துக்கு, மக்களனைவரும் சகோதரர். ஊர்களனைத்தும் சொந்த ஊர்போல. நன்மை தீமை இரண்டும் ஒருவன் தானே படைத்துக் கொள்கிறானே யன்றி,

பிறரால் வரத்தக்கனவல்ல. எனவே, அவனுக்கு யாரிடத்தும் விருப்போ வெறுப்போ இல்லை. சாவைக்குறித்த அச்சமும் அவனுக்கு இல்லை. பிறந்த நாள் தொடங்கியே சாவென்பது உண்டு. ஆகவே, மரணம் இனிப் புதிதாக வரப்போவது என்ற நினைவே இல்லை. உலகிலே நம்முடைய புலன்களுக்கு எட்டாத ஒரு நியதி இருக்கிறது. மக்களுயிர் அந்நியதியின் வழியே இயங்குகிறது. நீரிலே மிதக்கும் ஒரு பொருள், நீர் போம் வழியே போகவேண்டியிருப்பதுபோல, உயிரும் தன் செயலொன்றின்றியே தொழிற்படுகிறது. இதனால், வாழ்க்கை வேண்டுமென்று விரும்புவதற்கு என்ன இருக்கிறது? அல்லது வேண்டாமென்று ஒதுக்குவதற்குத்தான் என்ன இருக்கிறது? நன்மை மிக்கவர்களைப் பார்த்து மதிப்பதற்குத்தான் இடமுண்டா? அல்லது சிறியோரைக் கண்டு இகழ்தல்தான் கூடுமா?

யாதும் ஊரே ; யாவரும் கேளிர்,
தீதும் நன்றும் பிறர்தர வாரா,
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன.
சாதலும் புதுவ தன்றே, உளது.
வாழ்தல்,
இனிதென மகிழ்ந்தன்று மிலமே ; முனிவின்
இன்னா தென்றலு மிலமே ; மின்னொடு
வானந் தண்துளி தலைஇ, ஆனாது
கல்பொரு திரங்கும் மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல், ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தன மாகலின், மாட்சியிற்
பெரியோரை வியத்தலும் இலமே ;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.

இதுவே பழந்தமிழரது உண்மைப் பண்பாடு.

---